KALKI 27-3-83

ரூ 1.20

# கல்கி



கல்கி நடத்திய பாரதி விழா

சிங்கப்பூர் குடை!

கார்ல்மார்க்ஸ் நூற்றாண்டு



# கம்யூனிசத் தந்தை

**சோ**வியத் விஞ்ஞானிகள் கார்ல் மார்க்ஸுக்கு உயிரூட்டி விட்டார்கள். மாஸ்கோ நகரைச் சுற்றி வந்தார் கார்ல் மார்க்ஸ். ஒரு மாதம் கழித்து வானொலி நிலையம் சென்றார். இரண்டு மணி நேரம் பேசத் தமக்கு நிகழ்ச்சி நிரலில் அவகாசம் ஒதுக்குமாறு கோரினார்.

''சரி, ஆனால் உங்கள் பேச்சை சென்ஸார் செய்ய வேண்டியிருக்கும்'' என்று பதில் கிடைத்தது.

''அப்படியானால் ஒரு மணி நேரம் பேசினால் போதும்'' என்றார் கார்ல் மார்க்ஸ்.

''அப்போதும் சென்ஸார் உண்டு!''

''பத்து நிமிஷம்?''

தர்ம சங்கடத்துக்குள்ளானார் நிலையத் தலைவர். யோசித்து, ''வேணுமானால் ஒரு வாக்கியம் பேசுங்கள். சென்ஸார் செய்யாதிருக்கிறோம்'' என்றார்.

''சரி'' என்று ஒப்புக்கொண்ட கார்ல் மார்க்ஸ், ஒலிபரப்பு தொடங்கவும் கூறினார்:

''அடித்தள மக்களே! உங்களுக்காகப் பாடுபட்ட கார்ல் மார்க்ஸாகிய என்னை மன்னித்து விடுங்கள்!''

இப்படி ருஷ்யாவில் மக்கள் ஜோக் அடிப்பதாக அமெரிக்கர்கள் பிரசாரம் செய்வார்கள். அமெரிக்க காபிடலிஸத்தைப் பற்றிய ருஷ்ய ஜோக்குகளுக்கும் பஞ்சமில்லைதான். ஜோக் எப்படி இருந்தாலும் பாதி உலகுக்கு மேல் ஒரு புரட்சி பரவி கார்ல் மார்க்ஸின் கம்யூனிஸ சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டுதானிருக்கிறது. அவர் காலமாகி நூறு ஆண்டுகளுக்குப் பிறகும் கம்யூனிஸம் ஒரு சக்தி வாய்ந்த இயக்கமாக மேலும் பல நாடுகளில் பரவியும் வருகிறது.

தமது தத்துவங்களை விளக்கி கார்ல் மார்க்ஸ் எழுதியுள்ள நூல்கள் பலப்பல. என்றாலும் ''டாஸ் காபிடால்'' தான் கம்யூனிஸ்டுகளுக்கு வேதம் போல. அந்நாளில் மேல் நாடுகள் தொழில் புரட்சியின் பலாபலன்களை அனுபவிக்கத் தொடங்கியிருந்தன. பல புதிய புதிய யந்திரங்கள் உருவாக்கப்பட்டதில் உற்பத்தி ஏகமாக அதிகரித்து வந்தது. அபிவிருத்தி அடைந்து வந்த தொழில் நுணுக்கங்களைப் பயன்படுத்தி எண்ணிக்கையில் குறைவான முதலாளிகள் அதிகபட்ச லாபம் அடைந்து வருவதை கார்ல் மார்க்ஸ் எடுத்துக் காட்டினார். இதே நேரத்தில் உழைக்கும் வருப்பினர் (தமக்குப் பாதுகாப்புத் தரும் சட்டங்கள் ஏதும் இயற்றப்படாத நிலையில்) பிறரைச் சார்ந்து வாழ வேண்டியிருப்பதையும், மேன் மேலும் துயரில் ஆழ்ந்து போய்க் கொண்டிருப்பதையும் சுட்டினார். இதற்குப் பரிகாரம் என்னவெனில் தனிநபர் யாருமே சொத்துச் சேர்க்க அனுமதிக்கக் கூடாது! இந்த மாற்றத்தை உருவாக்கப் புரட்சி தோன்ற வேண்டும். அந்தப் புரட்சிக்குப் பின் எல்லா உற்பத்தித் திறனும் சமுதாய உடைமையாக்கப்படும். அந்தச் சமுதாய அமைப்பில் அனைவருக்கும் வேலை வாய்ப்பும் அனைவருக்கும் வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை வசதிகளும் கிட்டும்.

ஜெர்மனியில் பிறந்த இந்தப் புரட்சி எழுத்தாளர் 31 ஆண்டுகளுக்குப் பிறகு இங்கிலாந்தில் 1849ல் குடியேறினார். 1867ல் ''டாஸ் காபிடால்'' எழுதினார். அவருடைய தத்துவங்களின்படியே கம்யூனிஸ நாடுகளில் ஆட்சி நடக்கிறதா என்பது சந்தேகமே. ஏன், சுதந்திர ஜனநாயக முறையிலும் மக்களாட்சிக்கென வரையறுக்கப்பட்ட கோட்பாடுகளின்படியே எல்லாக் காரியங்களும் நடப்பதில்லைதான். எந்த லட்சியவாதியின் கனவுகளும் முழுமையாக நிறைவேறுமென்று எதிர்பார்க்க முடியாது. என்றாலும் சாகாவரம் பெற்று விடுகிற இந்த லட்சியங்களே மானுட சமுதாயத்தின் பொருளாதார– நாகரிக முன்னேற்றங்களுக்குத் துணை நிற்கின்றன.

- கி. ராஜேந்திரன்



⌘ மேடையில் ம. பொ. சி., சௌந்தரா கைலாசம், அவ்வை நடராஜன், குமரி அனந்தன், இரு. சோமு
பாரதி கொள்ளுப்பேரன் ராஜ்குமார் கடவுள் வணக்கப் பாடல் பாடுகிறார்.

அன்பார்ந்த நேயர்களுக்கு,

கல்கி நடத்திய பாரதி விழாவுக்கு நேரில் வந்து சிறப்பித்த, கடிதம் எழுதி வாழ்த்திய உங்கள் அனைவரையும் கரம் கூப்பி வணங்குகிறேன். நீங்கள் நடத்தும் விழாவாகவே கருதி ஆறு மணிக்கெல்லாம் மயிலை ஏ.வி.எம். ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் குழும ஆரம்பித்தீர்கள். பாரதி பாட்டுக்களை நாட்டுடைமையாக்கச் சம்மதித்த பெருந்தகை ஏ. வி. மெய்யப்பன் அவர்களைச் சதா நினைவூட்டிக் கொண்டிருக்கும் இம்மண்டபத்தில் பாரதி விழா நடந்ததும் மிக்கப் பொருத்தம் தான். ஆறரைக்கு அரங்கம் நிரம்பிவிட்டது. ஆறே முக்காலுக்கு விழாத் தலைவர் திரு ம. பொ. சி. வந்ததும் விழா தொடங்க, சரியாக 9 மணிக்கு நாட்டு வாழ்த்துப் பாடப்படும் வரை ஒருவர் கூட அப்படி இப்படி நகரவில்லை. அவ்வளவு ஆர்வமாக நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்தீர்கள்.

இதனை வாசகர் விழா என வர்ணிப்பது பல விதங்களில் பொருந்தும். பாரதி நூற்றாண்டினையொட்டி கவிஞர்களுக்காகப் புதுக் கவிதை, மரபுக் கவிதைப் போட்டிகள்



⌘ குமரி அனந்தனுக்குக் கல்கி ஆசிரியர் மாலை அணிவிக்கிறார்.

⌘ மொபட் பரிசுபெற்ற அ. குமாருக்குக் 'கல்கி' ஆசிரியர் மாலை அணிவித்துக் கௌரவிக்கிறார்.









✻ விழாவுக்கு வருகைதரும் சுந்தரம் க்ளேட்டன் மானேஜிங் டைரக்டர் வேணு சீனிவாசனைக் கல்கி ஆசிரியர் திரு ராஜேந்திரன் வரவேற்கிறார். அருகே கல்கி டைரக்டர் முரளி.



# கல்கி நடத்திய பாரதி விழா



✻ விழாவுக்குத் தலைமைவகித்த ம. பொ. சி.

நடத்துவதுடன் நில்லாமல் வாசக அன்பர்கள் எல்லோருமே பங்கேற்கக் கூடிய விதமாக பல எளிய போட்டிகளை அறிவித்தோம். எளிய போட்டிகள் என்றாலும் பாரதியின் கவிதைத் தொகுப்பு நூலைப் புரட்டிப்புரட்டிப் பாராமல், படித்துப் பார்த்து ரசிக்காமல் இந்தப் போட்டிகளில் யாருமே கலந்து கொள்ள முடியாது. அவ்வாறிருக்கப் பல்லாயிரக் கணக்கில் இந்தப் போட்டியில் நீங்கள் உற்சாகமாகப் பங்கேற்றதானது கல்கி வாசகர்களின் பாரதி பக்தியை— அதற்கு நிரூபணம் தேவை யெனில் — நிரூபித்தது.

இவற்றுள் ஒரு போட்டிக்கு சுந்தரம் க்ளேட்டன் நிறுவனம் ஒரு டி. வி. எஸ்-50 மொபெட் பரிசு அளிக்கலாமே என்று நாங்கள் யோசனை தெரிவித்த மறு கணம் ''அதற்கென்ன செய்து விட்டால் போயிற்று'' என்று சுரேஷ் கிருஷ்ணா ஒப்புதல் அளித்தார். இந்த ஒரு போட்டியில் மட்டும் சுமார் 10,000 கல்கி வாசகர்கள் பங்கேற்றனர். இவர்களின் தபால்களைப் பரிசீலித்து இரண்டு விடை சரி, 4 விடை சரி, என்று பிரிப்பதற்குள் எங்களுக்கு வியர்த்து விறுவிறுத்து, உன்பாடு என்பாடு என்றாகி விட்டது. என்றாலும் 10,000ல் ஒருவராக ஐந்து விடைகளையும் சரியாகக் குறிப்பிட்டிருந்த பெங்களூர் அ. குமார் எம்மிடம் சிக்கியதும் நாங்கள் பட்ட கஷ்டமெல்லாம் பறந்து போய் ஆனந்தப் பெரு வெள்ளத்தில் மிதந்தோம்.

திரு குமார் பெங்களூரிலிருந்து நேரில் வர, சுந்தரம் க்ளேட்டன் மானேஜிங் டைரக்டர் திரு வேணு சீனிவாசன் தாமே வந்திருந்து மொபெட் பரிசினை வழங்க, மங்கல வாத்தியம் முழங்க, அதனையும் மூழ்கடித்தது வாசக அன்பர்களின் கரவொலி!

விழாவின் தொடக்கத்தில் மகா கவி பாரதியின் கொள்ளுப் பேரன் ராஜ்குமார் பாரதி இறைவணக்கமாகப் பாரதி பாடலைப் பாடினார். அதைத் தொடர்ந்து, அமரர் கல்கி பாரதியாரைப் பற்றி யாத்த ஒரு பாடலை ஸ்ரீமதி ஆனந்தியும் ஸ்ரீமதி விஜயாவும் பாடியது மிகவும் பொருத்தமாய் அமைந்தது.



✖ கோகுலம் கௌரவ ஆசிரியர்
அழ. வள்ளியப்பா நன்றியுரை

கல்கி அவர்களையும் மகா கவி பாரதியையும் ஒருங்கே பாடல் நினைவூட்டியதால் தானோ என்னவோ, இந்த விழா பாரதியுடன் இணைந்த ''கல்கி'' விழாவாகவும் விளங்குமாறு பேச்சாளர்கள் செய்து விட்டனர்!

எடுத்த எடுப்பிலேயே திருமதி சௌந்தரா கைலாசம் அவர்கள் கல்கி, டி. கே. சி., ராஜாஜி, சதாசிவம் ஆகியோரிடையே நிலவிய நட்பின் ஆழத்தைச் சொல்லி அப்படியெல்லாம் ஆழ்ந்த நட்புப் பாராட்டும் பழக்கமே இன்று போய் விட்டது என்று கூறினார். இதையடுத்து ஒரு சிறந்த நட்பைக் குறிப்பிட வேண்டுமெனில் அது டி. கே. ஷண்முகம் அவர்களுக்கும், ம. பொ. சி. அவர்களுக்கும் இடையில் நிலவிய நட்பைத்தான் சொல்ல முடியு மென்றார்.

இந்தத் தருணத்தில் நான் ம. பொ. சி. அவர்களிடம் ''ஷண்முகம் மறைந்தபோது உங்களுக்கு ஏற்பட்ட துக்கத்தை யொத்தது தான் நண்பர் காஸா சுப்பா ராவ் (சுயராஜ்யா ஆசிரியர்) மறைவின்போது ராஜாஜிக்கு ஏற்பட்ட துயர்'' என்றேன். அதற்கு ம. பொ. சி. கூறிய ஆழமான பதில்: ''இத்தனைக்கும் காஸா பல சந்தர்ப்பங்களில் ராஜாஜியுடன் கருத்து மாறுபட்டுப் பேசி, எழுதியவர் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்!''

**''பா**ரதியை மூன்று விதமாக நாம் போற்றலாம்'' என்று தொடங்கினார் திரு மீ. ப. சோமு. ''அவர் கவிதைகளைப் படிப்பது, பரப்புவது, அதன்படி வாழ்ந்து காட்டுவது. இந்த மூன்று வகையிலும் பாரதியைப் போற்றியவர் கல்கி. அவர் தமது பத்திரிகைக்குத் தாரக மந்திரமாகத் தேர்ந்தெடுத்ததும் பாரதி வரிகளைத்தான்!'' 'தமிழ் திரு நாடு தன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா' என்ற தொடரில் 'பெற்ற' என்ற சொல்லின் இலக்கிய நயத்தையும் முக்கியத்துவத்தையும் திரு சோமு விளக்கியபோது மெய் சிலிர்த்தோம்.

திரு அவ்வை நடராஜன், ''டி.வி.எஸ். நிறுவனத்தினரின் பெருந் தன்மையும், நற்பணிகளுக்கு உதவும் பான்மையும் எல்லாரும் அறிந்ததே: நமது கல்கி ஆசிரியர் கேட்டதுதான் கேட்டார், ஒரு ஃபியட் கார் கொடுங்கள் என்று கேட்காது போனாரே! நமது குமாருக்கு பியட் கார் நஷ்டமாகிப் போனதே'' என்று பேச்சைத் தொடங்கிய போதே ஆரவாரமாகச் சிரிப்பலைகள் அவையில் எழுந்தன. தொடர்ந்து, நாம் வீடுகளிலே பேனா தேடுகிற வேடிக்கையைக் கூறி '''எல்லா இடத்திலும் தேடிட்டேன் எங்கேயும் காணும்' என்று நாம் அலுத்துக் கொள்வது போல்தான் பாரதியும் உலக மொழிகள் பலவற்றிலும் தேடித் தேடிப் பார்த்துவிட்டு தமிழ் மொழி போல் இனிதாவது எங்கும் காணோம் என்று பாடியிருக்கிறார்'' என்றார். அவ்வை நடராஜன் பேச்சில் கவிச் சுவையும் நகைச் சுவையும் களிநடனம் புரிந்தன.

குமரி அனந்தன் அவர்களின் நயாக்ரா நீர் வீழ்ச்சி போன்ற கம்பீரமானதும் அதே நேரத்தில் மலர்ந்த ரோஜாவாக இலக்கிய மணம் பரப்புவதுமான பேச்சைக் கேட்க ஆர்வத்தோடிருந்த ரசிகர்கள் பிறவிப் பயன் பெற்றது போல் அன்று மகிழ்ந்தார்கள். ''இந்த விழாவில் என்னைப் பங்கேற்குமாறு திருச்செந்தூரில் வந்து கேட்டார்கள். அங்கே நாங்கள் வெற்றி பெற முடியாது போயிற்று. ஆனால் அங்கு வெற்றி பெற்றிருந்தால் எத்தனை மகிழ்ச்சி யடைந்திருப்பேனோ அதற்கு இணையான மகிழ்ச்சியை இந்த விழாவில் பங்கேற்பதன் மூலம் நான் அடைய முருகன் வழி வகுத்தான்'' என்று கூறிய கணத்திலேயே அவையோர் இதயங்களை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்ட குமரி அனந்தன் சுமார் அரை மணி நேரம் சொற்பெருக்காற்றினார். முப்பது வினாடிகளாக ஓடிச் சென்ற நிமிஷங்கள் அவை. குமரி அனந்தனின் தேசிய நோக்கமும் மக்கள் இன்னமும் விழிப்புணர்ச்சி பெறுதிருக்கிறார்களே என்பதால் ஏற்பட்ட ஏக்கமும் பிரதிபலித்த அந்தப் பேச்சில் முழுக்க முழுக்க பாரதிதான் ஆவேசம் ததும்பப் பேசிக் கொண்டிருந்தானே யன்றி குமரி அனந்தனை நாம் மறந்தே போய்விட்டோம்!

கடைசியாக விழா நிகழ்ச்சிகளுக்குச் சிகரமாக அமைந்த ம. பொ. சி. அவர்களின் சொற்பொழிவு. குமரி அனந்தன் தேசியத்தை வலியுறுத்தினாரெனில் ம. பொ.சி. அதற்கும் ஒரு படி மேலே சென்று பாரதியின் சர்வதேசியத்தை விளக்கினார். பாரதியின் கனவுகள் பல நனவாகாமலேயே இருக்கின்றனவே என்று ஏங்குவதோடு நில்லாமல் வேறு சில கனவுகள் நிறைவேறியிருப்பதைக் கண்டு மகிழவும் கற்றுக் கொள்வோம் என்று பல உதாரணங்களை எடுத்துக் கூறினார். ''பாரதிக்கு கல்கி நினைவு மண்டபம் எழுப்பினார் எனில் கல்கி அவர்களுக்கோ வேறு நினைவுச் சின்னம் தேவையே யில்லை: கல்கி பத்திரிகை வளமோடு நடந்து வந்தாலே போதும்'' என்ற அவரது நல்லாசிகளைக் கல்கி வாசகர்கள் அனைவருக்குமே உரியதெனச் சமர்ப்பிக்கிறேன். - கி. ராஜேந்திரன்

புகைப்படங்கள்: சரஸ்வதி சத்தியமூர்த்தி பால்ராஜ்



# வில்லனாக நடிப்பதால் சில லாபங்கள்!

**சங்கிலிமுருகன் பேட்டி**

"அப்போது எனக்குப் பத்து வயதிருக்கும். மதுரையில் பாட்டி வீட்டில் தங்கிப் படித்து வந்தேன். காலஞ்சென்ற நடிகர் பி. யூ. சின்னப்பா நடித்த ரத்னகுமார், சுதர்ஸன் போன்ற படங்கள் ரிலீசான சமயம். எங்களது குடும்பத்துக்கும் அவருக்கும் பழக்கம் உண்டு. அவர் எனது தந்தையின் நண்பர். அந்த இனம் புரியாத வயதில் பி. யூ. சின்னப்பாவின் விசிறியாகிவிட்டதால் வீட்டுக்குத் தெரியாமல் மதுரை மீனாட்சியம்மன் கோவிலுக்குப் போய் இடது கையில் பி. யு. சின்னப்பா என்று பச்சை குத்திக் கொண்டேன். வலது கையில் என் பெயர் பச்சை குத்திக் கொள்ளவும் சேர்த்தே காசு கொடுத்து விட்டேன். ஆனால் இடது கையில் பச்சை குத்தியதே வலி தாங்க முடியவில்லை. அடுத்த நாள் வருவதாகக் கூறி வீடு திரும்பினேன்.

வீட்டுக்குப் போவதற்குள் ஜுரம் அடிப்பது போலிருந்தது. பூனை போல் பதுங்கிப் பதுங்கி நுழைவதைப் பாட்டி பார்த்துவிட்டு இரைந்தாள்.

''ஏண்டா ரெண்டிப் பயலா நீ? உன் மூஞ்சிக்குப் பச்சை குத்தறது வேறயா? படிக்கிற புள்ளையா லட்சணமா இல்லாமல் ஏண்டா இப்படிப் பண்ணினாய்?''

துடைப்பத்தால் அடிக்கவும் செய்தாள் பாட்டி!

''மறக்க முடியாத இளமை அனுபவம்!'' என்றார் பல படங்களில் வில்லனாக நடிக்கும் சங்கிலி முருகன்!

''படங்களில் வில்லனாக நடிப்பதால் நிஜ வாழ்க்கையில் ஏதாவது நன்மை உண்டா?''

''சமீபத்தில் ஈரோட்டில் ஒரு கலை நிகழ்ச்சிக்குப் போயிருந்தேன். என்னோடு வந்திருந்த கல்லாப்பெட்டி சிங்காரம், குண்டு கல்யாணம் போன்ற நடிகர்களின் சட்டையைப் பிடித்து இழுத்து ரசிகர்கள் உரிமையோடு வரவேற்றனர். ஆனால் அவர்களுக்குப் பின்னால் சென்ற என்னிடம் நாலடி தள்ளி நின்றே ரசிகர்கள் வணக்கம் சொன்னார்கள். இது ஒரு நன்மைதானே? படங்களில் வில்லனாக நடிப்பவனை நிஜ வாழ்க்கையிலும் மக்கள் நெருங்கத் தயங்குகிறார்கள் என்பதை இந்த அனுபவம் உணர்த்தியது.''

''வில்லனாக நடிக்க ஆரம்பித்த பின் புதிதாக என்ன கற்றீர்கள்?''

''ஒரு கை ஓசை'யில் நடிக்க ஒப்பந்தமானதும் டைரக்டர் பாக்கியராஜ் ''முருகன் சார், படத்தில் நீங்கள் நிறைய சிலம்பச் சண்டை போடும்படி இருக்கும். முறையா கத்துக்குங்க'' என்று அன்புக் கட்டளையிட்டார்.

என்னிடமோ சிலம்பம் பழகக் காசில்லை. எங்களுடன் லாட்ஜில் குடியிருந்த சினிமா மீடியேட்டர் காலஞ்சென்ற ஏ. எஸ். பெருமாள் எனக்குக் கடன் கொடுத்தார். அத்துடன் ஸ்டண்ட் மாஸ்டர் மாடக்குளம் அழகிரிசாமியையும் அறிமுகப்படுத்தினார். கம்புச் சண்டையிடும்போது உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால்வரை நல்ல உடற் பயிற்சி கிடைக்கும். அதனால் ஒரே ராட்சசப் பசி. தினமும் இரண்டு மூன்று வேளை முழுச் சாப்பாடு சாப்பிட வேண்டியிருந்தது!''

''ஸ்டண்ட் சீன்களில் நடிக்கும்போது அனுபவம்?''

''நிஜமாக ஒருவரைக் குத்துவதை விட குத்து வாங்குவது போல் நடிப்பது பெரியகலை. தெங்கு மராட்டாவில் ''நெஞ்சிலே துணிவிருந்தால்'' படத்தில் நடித்துக் கொண்டிருந்தபோது ஹீரோ விஜயகாந்த் என்னைத் தொடர்ந்து தாக்குவது போலவும் நான் எதிர்த்து அடிக்காமல் ஜடமாக நிற்பது போலவும் காட்சியை அமைத்தார்கள். என்னதான் எதிரி பலசாலியாக இல்லாவிட்டாலும் ஒருவன் அடிக்கும்போது அவன் சும்மா நிற்க மாட்டான். அதனால் நானும் ஹீரோவைக் கொஞ்சமாவது திருப்பித் தாக்குவது அவசியம் என்று வாதிட்டேன். நான் கூறியது டைரக்டருக்கும் மற்றவர்களுக்கும் அதிர்ச்சியாக இருந்திருக்கும் போலிருக்கிறது. பிற்பாடு ஒப்புக்கொண்டார்கள்.''

''வரப்போகும் படங்களில் உங்களது விசேஷமுத்திரை நடிப்பு ஏதாவது உண்டா?''

''கே. கர்ணன் தயாரிக்கும் ''சட்டத்துக்கு ஓர் சவால்'' படத்தில் பலவிதமாகச் சிரிக்கிறேன். சூழ்நிலைக்கேற்ப ஒரு நடிகர் சிரிப்பது சற்றுக் கடினமான காரியம். எனக்கு நாடக அனுபவம் இருப்பதால்தான் இது சாத்தியமாயிற்று. சிரிப்பில் அலட்சியம், ஏளனம், கபடு என்று பல வகை உண்டு.''

**பேட்டி: மன்னை சௌரிராஜன்**







பாண்டிச்சேரி சர்க்கஸ்!

















கல்கி



1983 மார்ச் 27
துந்துபி பங்குனி 13
மலர் : 41 இதழ் : 35



# சத்தில்லாத பட்ஜெட்!

நிதியமைச்சர் நெடுஞ்செழியன் 96 கோடிக்குப் பற்றுக்குறை பட்ஜெட் சமர்ப்பித்திருந்த போதிலும் பட்ஜெட்டின் தொடக்கமே 89 கோடி கடனாக இருப்பதால் மொத்தப் பற்றுக்குறை 185 கோடி ஆகிறது.

பொதுவாகவே பல்வேறு வரிகளால் வருமானம் இவ்வளவு கிட்டும் என்று பட்ஜெட்டில் மதிப்பிடப்படுவதை விட அதிகமாகவே வசூலாவதுதான் வழக்கம் என்பதால் ஒருவேளை புதிய வரிகள் இல்லாமலே சமாளிப்பது சாத்தியமாகி யிருக்கக் கூடும். ஆனால் திரு நெடுஞ்செழியன் முன்னெச்சரிக்கையாக 26 கோடிக்குப் புதிய வரிகள் விதித்துள்ளார். இதற்காக ஏற்கெனவே உள்ள பலவரிகளில் சிலவற்றின் விகிதங்களை அதிகரிப்பதுடன் நில்லாமல் பிரவேச வரி என்பதாக ஒன்றை அறிமுகப் படுத்தியும் உள்ளார். அதாவது தமிழ் நாட்டில் 16 நகர்ப்புறங்களுக்குள் நுழையும் பல்வேறு பண்டங்களுக்கு அவற்றின் மதிப்பின் மீது இரண்டு சதம் பிரவேச வரி விதிக்கப்படும். இதனால் விலைவாசிகள் உயர மக்கள் அவதி அதிகரிக்கும் என்றும் லஞ்ச ஊழலுக்கு இது நிரம்ப இடமளிக்கும் என்றும் எதிர்க் கட்சிகள் சட்டசபையில் ஒருமித்து எடுத்துக்காட்டி வெளிநடப்புச் செய்தும் அமைச்சர் சில பொருள்களுக்கு நுழைவு வரியிலிருந்து விலக்களித்தாரே யொழிய வரியை வாபஸ் பெறவில்லை. இதற்கு அமைச்சர் கூறும் ஒரே சமாதானம் வேறு சில மாநிலங்களில் இந்த நுழைவு வரி இருக்கிறது என்பதுதான். வேறு மாநிலங்களில் செய்யப் படும் தவறுகளை யெல்லாம் தமிழகமும் செய்தாக வேண்டுமா என்ன?

பாரத ஒருமைப்பாடு சிந்தனைக்கே முரணானதான இந்த நுழைவு வரியிலிருந்து சித்த, யுனானி, ஆயுர்வேத மருந்துகளுக்கு விலக்களித்த அமைச்சர், அலோபதி மருந்துகளுக்கு விலக்களிக்காதது வியப்பும் வருத்தமும் தோற்றுவிக்கிறது. இன்று தமிழகத்தில் உள்ள டாக்டர்களில் மிகப் பெரும்பாலோர் அலோபதி மருந்துகளையே எழுதித் தருகின்றனர். உயிர் காக்கும் மருந்துகள் பணக்காரர்களால் மட்டும் பயன்படுத்தப்படுபவன அல்ல. மேலும் எந்த ஒரு குடும்பமும் மாதாந்திர பட்ஜெட்டில் மருந்துக்கென்று பணம் ஒதுக்குவதில்லை. எதிர்பாராமல் உடம்புக்கு வந்து விட்டால் குடும்பங்கள் நோயினால் மட்டுமின்றிப் பணத் தட்டுப்பாட்டாலும் அவதிப் படுகின்றன. அவ்வாறிருக்க இவைமீதுள்ள வரிகளைக் குறைக்காது போனாலும் மேலும் அதிகரிக்காமலாவது இருக்கலாம்.

தமிழக அரசின் மிகப் பெரிய தலைவலி மின்வாரியம்தான். வாரியத்துக்கு ஏற்படும் ஏராளமான நஷ்டத்தை வரிச் சுமையாக மக்கள்தான் தாங்குகிறார்கள். மின் கட்டணத்தை உயர்த்தி நஷ்டத்தைத் தவிர்க்கப் போவதாக அமைச்சர் கூறியுள்ளார். அவ்வாறெனில் பட்ஜெட்டில் உள்ள பற்றுக்குறை பெருமளவுக்குக் குறைந்து போகும். ஆக, புதிய வரிகளைத் தேடிக் கண்டுபிடித்து விதிக்க அவசியமென்ன?

தமிழக பட்ஜெட் மாநில வளர்ச்சிக்கு உதவுமா என்று நோக்கினால், நீர்ப்பாசனம், குடிநீர், அபிவிருத்தி, தொழில் வளர்ச்சி போன்ற முக்கிய துறைகளில் போதிய கவனம் செலுத்தப்படவில்லை எனக் காண்போம். சத்துணவுத் திட்டம் போன்ற பல சமுதாய நலத் திட்டங்கள் நல்லனவெனினும் போதிய செல்வம் மாநிலத்தில் உற்பத்தியாக வழிவகுத்தாலன்றி இத்திட்டங்களை நீண்ட காலம் வெற்றிகரமாக நடத்த முடியாது.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

○ இலைகள் உதிர்ந்து, காய்ந்து கொண்டிருக்கும் மரங்கள்.

○ "சோதனைகளைச் சமாளித்தே தீருவோம்" கலெக்டர் நாராயணன்

○ மங்கலம் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்கள்

○ வறண்டு கிடக்கும் மங்கலம் ஏரி

○ வரதராஜ்

பருவ மழை பொய்த்துப் போனதால் தமிழகமெங்கும் வறட்சி தாண்டவமாடிக் கொண்டிருக்கிறது. இதில் மிகக் கடுமையாகப் பாதிக்கப் பட்டிருக்கும் மாவட்டங்களில் வட ஆர்க்காடும் ஒன்று.

வந்தவாசி பஸ் நிலையம் அருகே சடையாண்டியைச் சந்தித்தேன். ராமசமுத்திரம் கிராமத்தைச் சேர்ந்த இந்த விவசாயி, 'மழையில்லாமல்...' என்று நான் ஆரம்பித்த உடனேயே கடகடவெனக் கொட்டிவிட்டார்.

''அந்த அநியாயத்தை ஏன் ஸார் கேக்கறீங்க. போன வருடம் சரியான மழை பெய்யலே. இந்த வருஷம் சுத்தமாகப் பெய்யவே இல்லே.ஒன்றரை ஏக்கரில் வேர்க்கடலே போட்டிருக்கிறேன். 90 அடி தோண்டி விட்டேன். கிணற்றில் தண்ணீர் சுரக்கவில்லே. வேர்க்கடலேப் பயிர் காய்ந்துகொண்டிருக்கிறது. என்னதான் செய்யறதுன்னு தெரியலே.''

தலேயில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார் சடையாண்டி.

சடையாண்டிக்கு மட்டும் அல்ல இந்தச் சோதனே, வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள கிட்டத்தட்ட ஐந்து லட்சம் விவசாயிகளுக்கும்தான்.

சாத்தனூர் அணையின் தண்ணீர் அளவு மிகவும் இறங்கிப் போய் விட்டது. வட ஆர்க்காடு மாவட்டம் முழுவதும் தண்ணீர் மட்டம் 90 அடிக்கும் கீழே போய்விட்டது. 2,77,000 கிணறுகளும், ஆயிரத்துக்கும் மேற்பட்ட சிறிய, பெரிய ஏரிகளும் காய்ந்து கிடக்கின்றன. நெல் சாகுபடியில் தஞ்சை மாவட்டத்துக்கு அடுத்தபடியாக இருந்த வட ஆர்க்காடு மாவட்டத்தில் இந்த வருடம் கிட்டத்தட்ட ஐந்து லட்சம் ஏக்கரில் போட்டிருந்த நெற் பயிர் தண்ணீர் இல்லாமல் காய்ந்து போய் விட்டது. விவசாய வேலேகளே நம்பியிருந்த நாலரை லட்சம் பேர் சோற்றுக்குக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

திருவண்ணுமலேயிலிருந்து சேத்துப்பட்டு (வ. ஆ.) செல்லும் வழியில் உள்ள கிராமம் மங்கலம். இந்தக் கிராமத்தின் ஜனத்தொகை ஏழாயிரம். அதில் கிட்டத்தட்ட இரண்டாயிரம் பேர் சென்னேக்கும் பெங்களூருக்கும் பிழைப்புத் தேடிச் சென்று விட்டார்கள். அந்தக் கிராமத்தில் உள்ள கிழக்குத் தெரு வெறிச்சோடி இருக்கிறது. ஒன்றிரண்டு குடும்பங்கள்தான் அங்கு வசிக்கின்றன. ஏரியோ சொட்டுத் தண்ணீர் இல்லாமல் காட்சி யளிக்கிறது. வறட்சிப் பணிகளில் ஒன்ருன தூர் எடுத்தலே இந்த ஏரியில் வைத்திருந்தால் நிறையப் பேருக்கு வேலே கிடைத்திருக்கும். ஆனல் அரசு வறட்சிப் பணிகள் எதையும் இந்தக் கிராமத்தில் துவங்கவில்லே. கிராமத்து இளேஞர்களான வேணு, லோநிராஜ், ரேணு ஆகியோர் திருவண்ணுமலேக்கு நடையோ நடை யென்று நடந்து முயன்று பார்த்தும் ஒன்றும் நடக்கவில்லே. வறட்சியைப் பார்க்க வந்த நிபுணர் குழு இந்தக் கிராமத்தின் வழியாகப் போயிருந்தும் இந்தக் கிராமத்தின் நிலேயைப் பார்க்கவில்லேயாம். ''கிட்டத்தட்ட அறுபது கார்களில் நிபுணர் குழுவும், அதிகாரிகளும் இந்தக் கிராமத்தின் வழியாகச் சென்ருர்கள். ஆனல் ஒருவர்கூட இங்கு எதையும் பார்க்கவில்லே.'' என்று வருந்துகிருர் வரதராஜ் என்ற இளேஞர். இவர் தற்போது சென்னே கே. கே. நகரில் செங்கல் சூளேயில் வேலே செய்து வருகிருர்.

திருவண்ணுமலே — செங்கம் பஸ் பாதையில் இரண்டு பக்கமும் பார்த்துக் கொண்டு போனல், கருவேல மரங்களும், காய்ந்த நிலமுமே கண்ணுக்குத் தெரிகின்றன. அங்கங்கே மிகச் சில பச்சை சதுரங்களும் தெரிந்தன. புதுப்பாளேயம் அருகே ஒரு கிராமத்தில் விசாரித்ததில் செங்கம் தாலுக்காவிலிருந்து மட்டும் ஐயாயிரம் பேர்கள் பிழைப்புத் தேடி வெளியூர்களுக்குச் சென்றிருக்கிருர்கள் என்ற தகவல் வந்தது. இந்த மாவட்டத்தில் இருந்து மொத்தம்30,000பேர் சென்னேக்கும் பெங்களூருக்கும், சித்தூருக்கும் பிழைப்புக்காகச் சென்றிருக்கிருர்கள்.

வட ஆர்க்காடு மாவட்டத்தில் செங்கம், வந்தவாசி, திருவண்ணுமலே தாலுக்காவில் உள்ள மக்கள் வழக்கமாக ஏப்ரல் மாதத்தில் வேலே தேடி வெளியூருக்குப் போவதுண்டு. ஆனல் இந்த வருடம் ஜனவரி மாதமே கிளம்ப ஆரம்பித்து விட்டார்கள் என்ருர், தானிப்பாடியைச் சேர்ந்த சுப்பிரமணியன். திருவண்ணுமலே பஸ் நிலேயத்தில் அவரை விசாரித்துக் கொண்டிருக்கும்போதே சேலத்துக்குச் செல்லும் பஸ் வரவே, குடும்பத்துடனும், மூட்டை முடிச்சுக்களுடனும் பஸ்ஸில் ஏறி அமர்ந்து விட்டார்.

'இந்த மாதிரி மக்கள் கூட்டம் கூட்டமாக மாவட்டத்தை விட்டுச் சென்று கொண்டிருக்கிருர்களே! இதை நிறுத்த வழியில்லேயா?' என்று மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரி பன்னீர்செல்வத்திடம் கேட்டேன்.

''அரசாங்கத்தால் முடிந்த வரையில் வறட்சி நிவாரணப் பணிகளில் அவர்களே ஈடுபட வைக்கிருேம். ஆனல் எல்லோருக்கும் எங்களால் வேலே கொடுக்க முடியவில்லே.

○ சமுத்திரம் கிராமத்தில் 90 அடி தோண்டியும் தண்ணீர் கிடைக்காத ஒரு கிணறு



இந்த மாநிலத்தை விட்டுச் சென்று கொண்டிருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம், அடுத்த மாநிலங்களான கர்நாடகமும், ஆந்திராவும் அருகிலேயே இருப்பதுதான். மதுரைக்குச் செல்லும் செலவை விட பெங்களூருக்கும், சித்தூருக்கும் செல்லும் செலவு குறைவுதானே'' என்றார் அவர்.

வட ஆர்க்காடு மாவட்டத்தில் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டுள்ள செங்கம், திருவண்ணாமலை, வந்தவாசி தாலுக்காக்களில் குடி தண்ணீருக்கும் பயங்கரப் பஞ்சம் தான். வயல்காட்டுக் கிணற்றில் தண்ணீர் ஊற ஊற இறைத்துப் பயன்படுத்தி விடுகிறார்கள். தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம், இந்தத் தாலுக்காக்களில் மிக அருமையாக வேலை செய்து கொண்டிருக்கிறது. கிட்டத்தட்ட 220 அடி ஆழத்துக்குக் கூடக் குழாய்க் கிணறுகளைப் பல்வேறு கிராமங்களில் அமைத்துக்கொடுத்திருக்கிறது. அவ்வளவு ஆழத்திலிருந்து சுலபமாகத் தண்ணீர் வரக் கூடிய முறையில் பம்புகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மக்கள் வாயாற குடிநீர் வாரியத்தைப் புகழ்கிறார்கள். எங்கெங்கு நிலத்தடி நீர் கிடைக்கிறது என்று விஞ்ஞான ரீதியில் கண்டு பிடித்து அங்கு குழாய்க் கிணறுகள் அமைத்திருக்கிறார்கள். ஒரு குழாய்க் கிணறு போட 20,000 ரூபாய் செலவாகிறதாம். தண்டராம்பட்டுப் பகுதியில் சில குழாய்களில் தண்ணீர் வரவில்லை.

ஆடு மாடுகளுக்குச் சாப்பிடுவதற்குப் புல் பூண்டு கூடக் கிடைக்காமல் பல கிராமங்களில் பூமி கட்டாந்தரையாகக் காட்சியளிக்கிறது. தண்ணீர்ப் பிரச்னையால் ஆடுகளும் மாடுகளும் அவஸ்தைப் படுகின்றன. 'நெறிஞ்சிப் பூண்டு' என்ற நஞ்சுச் செடியைத் தின்று பல மாடுகள் இறந்துபோயிருக்கின்றன.

திருப்பத்தூர், ஜோலார்பேட்டை போன்ற இடங்களில் சாதாரணமாகவே கோடையில் வறட்சி ஏற்படும். இப்போதோ சொல்ல முடியாத அளவுக்கு அதன் கொடுமை இருக்கிறது.

செய்வதற்கு வேலை இல்லை. குடிப்பதற்குத் தண்ணீர் இல்லை. ஜீவனத்திற்கு வழியில்லை.

சோவியத் மக்களின் வளமான வாழ்க்கை பற்றி மாஸ்கோவில் தொடர் சொற்பொழிவுகள் நடக்கின்றன. முதல் நாள் கூட்ட முடிவில் தோழர் இவான், பேச்சாளரைப் பார்த்துக் கேட்கிறார்:

'நீங்கள் சொல்வது சுவையானது. ஆனால் கடைகளில் இறைச்சி மட்டும் கிடைக்க மாட்டேன் என்கிறது. உற்பத்தியான இறைச்சி யெல்லாம் எங்கே?'

அடுத்த நாள் சொற்பொழிவு தொடர்கிறது. இன்னொரு தோழர் ஜார்ஜ் கூட்ட முடிவில் பேச்சாளரைக் கேட்கிறார்:

'ஐயா, நேற்று இவான் கேட்டதைப் போல நான் இறைச்சி எங்கே என்று கேட்கப் போவதில்லை. ஆனால் நேற்றுக் கேள்வி கேட்ட இவான் எங்கே?'

—எஸ். சுமதி



ஆனால் பெரியவர்கள் தமிழக முதல்வரை வாயாற வாழ்த்துகிறார்கள். காரணம்: சத்துணவுத் திட்டம்தான். இத்தனை வறட்சிக்கு இடையிலேயும் சத்துணவுத் திட்டம் மட்டும் எந்தத் தடங்கலுமின்றிச் சிறப்பாக நடந்து கொண்டிருக்கிறது. குறைந்தபட்சம் சிறுவர்கள் வயிற்றுக்காவது ஒரு வேளை உணவு கிடைக்கிறது. இப்போது இந்தத் திட்டத்தில் முதியோர்களையும் சேர்த்திருப்பதால், அவர்களுக்கும் ஒருவேளைச் சோற்றுக்குக் கஷ்டமில்லை.

காவிரிப் பிரச்னையோடு பாலாற்றில் வருடத்தில் சில நாட்களாவது தண்ணீர் ஓட கர்நாடகத்துடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டியது அவசியம்.

வட ஆர்க்காடு மாவட்டக் கலெக்டர் நாராயணனைச் சந்தித்துப் பேசியபோது சொன்னார்: ''ஒரு கோடியே நாற்பது லட்சம் ரூபாய் இந்த மாவட்டத்துக்கு வறட்சி நிவாரண நிதியாக ஒதுக்கியிருக்கிறார்கள். இந்த மார்ச் மாத முடிவுக்குள் 964 குழாய்க் கிணறுகள் தோண்டியாக வேண்டும். இதுவரை 750 குழாய்க் கிணறுகள் போட்டாகி விட்டது. 533 ஏரிகளில் தூர் எடுக்கும் பணி நடந்து கொண்டிருக்கிறது. நெடுஞ்சாலைத் துறையில் சாலைகள் போடும் வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. கிட்டத்தட்ட 25,000 பேருக்கு வேலை கொடுத்திருக்கிறோம். மாவட்டத்தில் உள்ள நகர்களில் எல்லாம் குடிதண்ணீர்ப் பிரச்னை இல்லாதபடி பார்த்துக் கொண்டுள்ளோம். 6500 சத்துணவு மையங்களில் ஏழரை லட்சம் குழந்தைகள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். வரப்போகும் மாதங்கள் மிகவும் சோதனையானவை. அதற்காக இப்போதே எங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டு வருகிறோம். நிச்சயம் சமாளிப்போம் என்ற நம்பிக்கையுண்டு.''

—நமது நிருபர்

படங்கள்: சுபா


சவிதா
நேசமுள்ள
வான்சுடரே!
புதிய
தொடர்கதை
கல்கி 17-4-83 இதழில்
ஆரம்பம்

# இந்து சமய கலைவிழா

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
## ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் முன்னிலையில்

### சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நடைபெறுகிறது

உலகிலுள்ள கலாசாரங்களுள் இந்திய கலாசாரம் — பண்பாடு உலகம் தோன்றிய காலம் முதல் வரக்கூடிய பழைமையான கலாசாரம். இந்திய கலாசாரம் ஒவ்வொன்றும் வாழ்க்கையில் வாழ வேண்டிய வழி வகைகளைச் சொல்லிக் கொடுக்கிறது. அறுபத்து நான்கு கலைகள் பழங்காலத்தில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கலையும், மனித வாழ்வினுடைய தூய்மையையும்—புஷ்டியையும்—நேர்மையையும் வளர்த்துக் கொடுக்க உதவுகிறது.

தற்காலத்தில் பல கலைகள் தொழில் ரூபமாக வளர்ந்து வந்தாலும், கலை என்ற உணர்வு ஏற்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள் 64 கலைகளை யும் கொண்ட இந்து சமயக் கலைவிழா ஒன்று மார்ச் 30 முதல் ஏப்ரல் 3 வரை சென்னையில் நடத்த இருக்கிறார்கள்.

நிகழ்ச்சிகள் பிரதி தினம் காலை 8—30 மணிக்குத் தொடங்கி 11—30 வரை யிலும் மாலை 3 மணிக்குத் தொடங்கி 5—30 வரையிலும் இரவு 6 மணிக்குத் தொடங்கி 11 மணி வரையிலும், சொற்பொழிவு — கருத்தரங்கு — கலா நிகழ்ச்சிகள் — போட்டிகள் நடைபெறும். இந்து சமய கலைகளைத் தெரிவிக்கும் வகையில் ஒரு கண்காட்சியும் நடைபெறும்.

**மார்ச் 30. மாணவர்கள் நாளாகவும் —**
**,, 31. மகளிர் நாளாகவும் —**
**ஏப்ரல் 1. இளைஞர்கள் நாளாகவும் —**
**,, 2. ஹரிஜனங்கள் நாளாகவும் —**
**,, 3. கவியரங்க நாளாகவும்** ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது

ஏப்ரல் 2ம் தேதி ஐலண்ட் கிரவுண்டிலிருந்து மாலை 3 மணிக்கு தொடங்கி தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானம் வரை ஓர் ஊர்வலமும் நடைபெறும். அதில் அனைத்து பஜனை சங்கங்களும் பங்கு கொள்ளும். ஏப்ரல் 3ம் தேதி மாலை4மணிக்கு ஏழை எளியவர்களுக்குச் சுயதொழில் செய்வதற்கு உபகரணங்கள் அளிக்கப்படும்.

ஆகவே ஒவ்வொரு இந்துப் பெருமக்களும் இந்த விழாவைத் தங்களுடைய விழாவாக எண்ணிக் கலந்து கொண்டு சிறப்பிக்கும்படியாகக் கேட்டுக்கொள் கிறோம்.

நிகழ்ச்சி நிரல் பொதுவாக உள்ளது பின்வருமாறு :

1. **காலை நிகழ்ச்சி :**
   காலை 8—30 முதல் 11—30 வரை
   முதலில் பிரார்த்தனைகீதம் — தலைமை உரை — கருத்தரங்கு போட்டிகள் நடைபெறும்.
2. **மாலை நிகழ்ச்சி :**
   முதலில் பிரார்த்தனை கீதம் — தலைமை உரை — கருத்தரங்கு போட்டிகள் நடைபெறும்.
3. **இரவு நிகழ்ச்சி முன் பகுதி :**
   முதலில் பிரார்த்தனை கீதம் — தலைமை உரை — தொடக்க உரை — அருளுரை அறிஞர்களைக் கொண்டு சொற்பொழிவு.
4. **இரவு நிகழ்ச்சி பின் பகுதி :**
   9 மணி முதல் கலை நிகழ்ச்சி



✖ அமெரிக்காவில் உருவாகிவரும் மீனாட்சி கோவில் நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். உதவிக்கச்சேரி...

# இசையின் சிறப்பில் இறைவனைக் கண்டோம்!

அமெரிக்காவில் வாழும் இந்துக்களுக்கு வழிபாடு தலமாகவும், ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொள்ள வசதியாகவும், பல்வேறு நகரங்களில் கோயில்கள் உருவாகியுள்ளன. திரு வி. வி. நரசிம்மன், டாக்டர் ஏ. அழகப்பன் போன்ற பலரது நன் முயற்சியால் எழுந்துள்ள இக்கோயில்களுக்கு அமெரிக்கர்களும் விஜயம் செய்து, இந்து மதம், பாரத கலாசாரம் பற்றி அறிந்து கொள்கின்றனர். இவை இரு நாட்டு மக்களிடையே நட்புறவு வளர உதவுகின்றன. அமெரிக்காவிலேயே பிறந்து வளரும் இந்தியக் குழந்தைகள் தங்கள் பாரம்பரியச் சிறப்புக்களை மறந்து விடாதிருக்கத் துணை செய்கின்றன. இந்த ஆலயங்களுக்கு இந்தியாவிலிருந்தபடி தேவையான பொருள்களையும் சிற்பக்கலைஞர்களையும் வேத சாஸ்திர அறிஞர்களையும் அவ்வப்போது அனுப்பி வைத்து உதவுவதற்காக ''பாரத் சர்வதேச அறக்கட்டளை'' சென்னையில் நிறுவப்பட்டது. திரு எஸ். விஜி, திரு என்.எஸ். சேதுராமன், திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு போன்ற பலர் இதன் காப்பாளர்கள். இவர்களுடைய நன் முயற்சியால் ஹூஸ்டன் நகரில் உருவாகி வருகிற மீனாட்சி கோயில் திருப்பணி நிதிக்காக திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி உதவிக் கச்சேரி செய்தார். சிவராத்திரியன்று சென்னை மியூஸிக் அகாடமியில் நடந்த இந்தக் கச்சேரி சுமார் ஓராண்டு காலத்துக்குப் பிறகு திருமதி எம். எஸ். நடத்திய முதல் இன்னிசை நிகழ்ச்சியாகும். இதனால் பேரார்வத்துடன் திரண்டிருந்த ரசிகப் பெருமக்கள், ஸ்ரீமதி ராதா விசுவநாதன் உடல்நிலை தேறி, தாயாருடன் சேர்ந்து பாடியதைக் காணப் பெருமகிழ்ச்சி அடைந்து கரவொலி எழுப்பினர். ஸ்ரீமதி விஜயா ராஜேந்திரன் உடன் பாட, ஸ்ரீ கண்டதேவி அழகர்சாமி, குருவாயூர் துரை, விஜயக்ராம் ஆகியோர் பக்க வாத்தியங்கள் வாசித்துச் சிறப்பித்தனர்.



✖ ...நிகழ்த்தியதை யொட்டி பிரசுரமான மலரை வெளியிட்டு முதல் பிரதியை ஸ்ரீமதி எம். எஸ். ஸுக்கு வழங்குகிறார் அமைச்சர் திரு. ஆர். எம். வீரப்பன்.

பக்தி ரசத்தையும் சாகித்திய பாவத்தையும் சரியான அளவில் குழைத்துத் தரும் எம். எஸ்.ஸின் இன்னிசை நிகழ்ச்சி ஒவ்வொன்றுமே மெய் சிலிர்ப்பை ஏற்படுத்தக் கூடியது. இந்தக் கச்சேரியிலும் ஆபோகி (சபாபதிக்கு) சங்கராபரணம் (அக்ஷய லிங்க) கீரவாணி (சந்திர சேகரம் ஆச்ரயே—பெரியவாளைத் துதித்து டாக்டர் வே. ராகவன் இயற்றியது) பூர்வி கல்யாணி (மீனாட்சி) போன்ற பல பாடல்கள் எதிர்பார்த்தபடியே

நம்மை மெய் மறக்கச் செய்தன. எதிர் பாராத வியப்புக்களும் இருந்தன. தியாகையர் முக்கண்ணனைத் துதித்துப் பாடிய ''தேவாதி தேவ'' என்ற விந்து ராமக்கிரிய பாடலின் இனிமையில் சொக்கிப் போனோம். ''சிறுநகை தவழும் வதனனே'' எனவும் ''சாந்த குணத்தை அணிகலனாகக் கொண்டவனே'' எனவும் வித்தியாசமான வர்ணனையை உள்ளடக்கியதற்கு ஏற்ப சௌக்கியமான சங்கீதமாக அமைந்திருந்தது இப்பாடல். மகிழ்ச்சி நிரம்பிய ஆச்சரியத்துடன் நிமிர்ந்து அமரச் செய்த மற்றொரு பாடல், கர்நாடகத்தைச் சேர்ந்த யோக நரசிம்மர் ரஞ்சனியில் அம்பாளைத் துதித்து இயற்றியது. ''சதா சாரங்க நயனே ஸ்ரீ சதாசிவ தயிதே மாமவ'' என்று தொடங்கும் முதல் அடியிலேயே அம்பாளின் அழகிய விழிகளின் கருணை கடாட்சத்தைப் பெற்று நாம் உய்ந்து விட்டோம்!

ஹூஸ்டனில் மீனாட்சி ஆலயக் கும்பாபிஷேகத்தை நாம்பார்க்கப்போவதில்லை. ஆனால் ஸ்ரீமதி எம். எஸ்., மீனாட்சி சுந்தரேசவரருக்கு நடத்திய இசை அபிஷேகத்தை அன்று பலருக்கு ரசிக்கக் கொடுத்து வைத்திருந்தது.

தலைமை வகித்த அமைச்சர் வீரப்பன் குறிப்பிட்டது போல் மொழி, மத வேறுபாடுகளை யெல்லாம் கடந்து உலகளாவும் எம். எஸ்.ஸின் இசையில் இறைவனைத் தரிசித்தோம்.

-குட்டி கிருஷ்ணன்

''உன் மனைவி கடிதத்தில் வெற்றிகரமான நாற்பதாவது நாள்'னு எழுதியிருக்கிறதாச் சொன்னியே என்ன விஷயம்?''

''சினிமா டைரக்டர் மகளாச்சே, 'பிரியட்' தள்ளிப் போய் நாற்பது நாள் ஆகுது என்பதை இவ்வளவு மகிழ்ச்சியா எழுதியிருக்கா!''

-இரை அ. கதிர்வேல்





''பத்து வருஷமாச்சு கல்யாணமாகி! இன்னு வரை என் நகைகளில் ஒன்றைக் கூட பாங்கில வச்சு எங்க வீட்டுக்காரர் கடன் வாங்கினது கிடையாது!''

''ஐயோ பாவம்! பத்து வருஷமா கவரிங் நகைகள்தானா போட்டுகிட்டிருக்கே?''

-''யெஸ்.ஜீ''

''சினிமாவுக்கே போறதில்லிங்க!''

''ஏங்க அப்படி?''

''நான் சம்பாதிக்கிறது அவ சினிமாவுக்குப் போறதுக்கே சரியாயிடுது.''

-கோவி. சந்தானம்





கீழே விழாமல் இருப்பது நமக்குப் பெருமை அல்ல. ஒவ்வொரு தடவை விழும்போதும் சிரித்துக்கொண்டே எழுந்திருப்பதுதான் நமக்குப் பெருமை.

-கன்ஃபூஷியஸ்

அனுப்பியவர்: அனிதா ராமச்சந்திரன்

# சிரிப்புகள்

# The past lives again...

ZOON®
HIGH CONQUERING
INCENSE STICKS

# ZOON®
## INCENSE STICKS

ZOON — meaning 'moon' in that melodious language that is Kashmiri. Redolent of nights of adventure and delight. Of the hoary times of the Lunar race. Zoon, an enchanting fragrance.



*Manufactured and marketed by:*

ONAM AGARBATHI PRIVATE LIMITED

9/81, Rathnavilas Road, Basavanagudi, Bangalore 560 004

CLARION/OAPL/839

# கள்வனின் காதலி

## அத்தியாயம் 45

## சாஸ்திரியின் வியப்பு!

நாடகம் பார்த்த அன்றிரவு ஸப் இன்ஸ்பெக்டர் ஸர்வோத்தம சாஸ்திரியின் மீது அவருடைய மனைவிக்கு வந்த கோபம் தணியவே யில்லை. திரும்பி ஊருக்குப்போகும் வழியெல்லாம், ''நல்ல உத்தியோகம்! நல்ல வயிற்றுப்



பிழைப்பு! ஒன்றுமறியாத பெண் பிள்ளைகளைச் சந்தியில் இழுத்துத்தானா உங்கள் உத்தியோகம் நடக்க வேண்டும்? நன்றாயிருந்தது. நீங்கள் திருடன் பிடிக்கிற அழகு!'' என்று ஸ்ரீமதி மீனாட்சி அம்மாள் சாஸ்திரியாரை வெகுவாகச் சண்டை பிடித்ததோடு, சில தடவை கண்ணீர் கூடப் பெருக்கி விட்டாள். அபிராமியையும் தன்னையும் சாஸ்திரியார் அந்த மாதிரி உள்நோக்கம் ஒன்றை வைத்துக் கொண்டு நாடகத்துக்கு அழைத்துப் போனதை நினைக்க நினைக்க அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

சாஸ்திரியாருடைய மனோநிலையோ இதற்கு நேர் விரோதமாக இருந்தது. திருடனைப் பிடிக்கா விட்டாலும், அவன் இத்தனை நாளும் இருந்த இடத்தைச் சாமர்த்தியமாய்க் கண்டு பிடித்து விட்டாரல்லவா? அதனால் போலீஸ் இலாகாவில் அவர் மீதிருந்த சந்தேகமும் அடிபட்டுப் போயிற்று. இதனாலெல்லாம் அவருடைய மனத்தில் முன்னை விட அதிக உற்சாக மிருந்தது. ஆனால் இதைத் தம் மனைவியிடம் காட்டிக்கொள்ளாமல், மன்னிப்புக் கேட்பது போல் பாவனை செய்து அவளை ஒருவாறு சமாதானம் பண்ணி, திருப்பரங்கோவிலில் கொண்டு போய்ச் சேர்த்தார். பிறகு அவர், ''இந்த முத்தையன் விஷயம் பைசலாகும்வரையில் நமக்கு வீட்டில் இனிமேல் அமைதி இராது. ஆகையால் அவனைப் பிடித்து விட்டுத்தான் வீட்டுக்கு வருகிறது'' என்று மனத்திற்குள் தீர்மானித்துக் கொண்டு வெளிக் கிளம்பினார்.

மேற்கே கல்லணை முதல், கிழக்கே சமுத்திரம் வரையில் ஆங்காங்கு எல்லை வகுத்துக் கொண்டு கொள்ளிடக் கரை பிரதேசத்தைப் போலீஸார் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருந்தனர். ஸப் இன்ஸ்பெக்டர் ஸர்வோத்தம சாஸ்திரிக்கும், அவருடைய தலைமையில் இருந்த போலீஸ் படைக்கும் புரசூர் ஸ்டேஷன் முதல் பூங்குளம் வரையில் உள்ள பிரதேசம் விழுந்திருந்தது. கொள்ளிடப் படுகையில், காடு அதிகமுள்ள பிரதேசம் இதுதான். சேர்ந்தாற்போல் ஊர்கள் அதிகம் உள்ள இடமும் இதுதான். முத்தையனுடைய சொந்த ஊர் பூங்குளம் ஆகையால் அந்த ஊருக்குச் சமீபமாக அவன் வந்திருக்க மாட்டான் என்று முதலில் கருதப்பட்டது. ஆனாலும், அப்படி அலட்சியம் செய்யக் கூடாதென்று சாஸ்திரியார் கருதி, அந்த ஊருக்குப் பக்கத்திலும் நன்றாய்த் தேடிவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்திருந்தார். இப்படி அவர் தீர்மானம் செய்வதற்கு ஒரு காரணமும் இருந்தது.

சாஸ்திரியும் அவருடைய போலீஸ் படையும் 'காம்ப்' செய்திருந்தது புரசூரில். அங்கிருந்து அவர் போலீஸ் சேவகர்களை இரண்டு மூன்று பகுதியாகப் பிரித்துப் படுகையில் தேடிவர அனுப்பிவிட்டு, தாம் ஸைக்கிளில்லயன் கரைச் சாலையோடு போவது வழக்கம். ஒரு நாள் அப்படி அவர் போய்க்



கொண்டிருந்தபோது. பூங்குளத்துக்கு அருகில் ஒரு வேளாளப் பெண் மத்தியானம் பன்னிரண்டு மணிக்குக் கொள்ளிடத்தில் குளித்துவிட்டு இடுப்பில் குடத்துடன் தன்னந் தனியாக வயல் கரைச் சாலையைக் கடந்து ஊருக்குள் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்தார். ''இந்தப் பெண்தான் எவ்வளவு அழகாயிருக்கிறாள்?'' என்ற எண்ணம் அவர் அறியாமலே அவர் மனத்தில் தோன்றியது. பிறகு, ''அபிராமிக்கும் இந்தப் பூங்குளம்தானே: ஒருவேளை இந்தப் பெண் அபிராமிக்கு ஏதாவது உறவாக இருந்தாலும் இருப்பாள்.'' என்று நினைத்தார். அப்புறம் இன்னொரு வியப்பு அவர் உள்ளத்தில் ஏற்பட்டது. ''பக்கத்தில் இராஜன் வாய்க்காலில் தண்ணீர் அலைமோதியவண்ணம் போய்க் கொண்டிருக்கும்போது, இந்தப் பெண் எதற்காக இந்த உச்சி வேளையில் கொள்ளிடத்துக்குப் போய்க் குளித்துவிட்டு வருகிறாள்?'' என்று ஆச்சரியப் பட்டார்.

இப்படி அவர் எண்ண மிட்டுக் கொண்டே போனபோது, கொஞ்ச தூரத்தில் நாம் முதல் அத்தியாயத்தில் சந்தித்த தர்மகர்த்தாப் பிள்ளை எதிர்ப்பட்டார். உழவு தலைக்குப் போய்விட்டு அவர் திரும்பி வந்து கொண்டிருந்தார். ஸப் இன்ஸ்பெக்டர் அவரிடம் பேச்சுக் கொடுத்து விசாரித்து, குளித்துவிட்டுப் போகிற பெண்ணின் பெயர் கல்யாணி என்றும், அவளை இப்போது பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரனாக ,விளங்கும் முத்தையனுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பதாக ஒரு காலத்தில் பேச்சு இருந்த தென்றும் தெரிந்து கொண்டார். இப்போது கல்யாணி பெரிய சொத்துக்காரி என்பதையும் அறிந்தார். இதைக் கேட்டது முதல் அவர் மனத்தில் இன்னதென்று விவரம் தெரியாத ஒரு குழப்பம் குடிகொண்டது. நம்முடைய தேட்டத்துக்கும் இந்தப் பெண்ணுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்று அவருடைய உள்ளுணர்வு சொல்லிற்று. ஆனால் என்னமாய் அதைக் கண்டு பிடிப்பது? பகிரங்கமாய் விசாரித்துப் பலன் இல்லாமற் போனால் பைத்தியக்காரத் தனமாக முடியுமே?




* * *

அன்றிரவு சாஸ்திரி இரவு 11 மணிக்குத்தான் வந்து காம்பில் படுத்தாரானாலும் தூக்கம் என்னமோ வரவில்லை. பூங்குளம், கல்யாணி, முத்தையன், அபிராமி — இப்படியே அவருடைய எண்ணங்கள் சுழன்று கொண்டிருந்தன. மறுநாள் எப்படியும் பூங்குளத்துக்குப் பக்கத்தில் உள்ள காடுகளை நன்றாய்ச் சோதனை போடுவது என்று அவர் தீர்மானித்தார்.

மறுநாட் காலையில் அவர் போலீஸ்காரர்களைப் பிரித்து விட்டு, அவர்கள் இங்கிங்கே போகவேண்டும், இன்னின்ன செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தபோது, புரசூர் ரயில் ஸ்டேஷனில் சாதாரண உடுப்பில் (மப்டியில்) இருந்து, இறங்கி ஏறுபவர்களைக் கண்காணிக்கும்படி உத்தரவுபெற்றிருந்த போலீஸ்காரர் அவரிடம் வந்து, அன்று காலைப் பாஸஞ்சரில் சாயபு ஒருவர் ஒரு கோஷா ஸ்திரீயுடன் வந்து இறங்கிப் பாச்சாபுரம் என்ற ஊருக்கு வண்டி பேசிக் கொண்டு சென்றதாகத் தெரிவித்தார். அதைக் கேட்ட ஸப் இன்ஸ்பெக்டர் பலமாகச் சிரித்தார். ''ஓஹோ அப்படியா? திருடன் மறுபடி மதராஸுக்குப் போய் அங்கே கோஷா வேஷம் போட்டுக் கொண்டு ஒரு சாயபுவையும் கூட அழைத்துக் கொண்டு நம்மிடம் அகப்பட்டுக் கொள்வதற்காகத் திரும்பி வந்திருக்கிறானோ?'' என்றார்.

இப்போதெல்லாம் சாஸ்திரிக்கு மற்றவர்கள் கொண்டு வரும் துப்பு எதிலும் நம்பிக்கை ஏற்படுவதில்லை. முத்தையனைப் பற்றிய தகவல் வேறு யாராலும் கண்டுபிடிக்க முடியாதென்றும், தாம் ஒருவரால்தான் அவனைக் கண்டுபிடிக்க முடியும் என்றும் ஓர் எண்ணம் அவர் மனத்தில் வேரூன்றி இருந்தது.

ஆகவே மேற்படி துப்பில் அவருக்கு அதிகச் சிரத்தை ஏற்படவில்லை. ஆனா

லும் அதை அடியோடு அலட்சியம் செய்து விடுவதாகவும் அவருக்கு உத்தேசமில்லை. மேற்கண்டவாறு அவர் கேலியாய்ப் பேசிக் கொண்டிருந்த போதே, மனத்திற்குள், ''பாச்சாபுரம் பூங்குளத்துக்குப்பக்கத்தில்தானே இருக்கிறது? அங்கே இந்தக் கோஷா ஸ்திரீ மர்மத்தை விசாரித்துவிட்டால் போகிறது!'' என்று எண்ணிக் கொண்டார்.

## அத்தியாயம் 46

## குடம் உருண்டது

**பா**ச்சாபுரம் கடைத் தெருவில் உண்மையாகவே ஒரு மாட்டு வண்டி கிடக்கத்தான் செய்தது. அதை லயன் கரையிலிருந்தே பார்த்த சர்வோத்தம சாஸ்திரி தம் பின்னோடு வந்த உடுப் பணியாத போலீஸ்காரரை அனுப்பி அதில் யார் வந்தது என்று விசாரித்து வரச் சொன்னார். வண்டிக்காரன் கடைத் தெருவிலிருந்த மிட்டாய்க் கடையில் இட்லி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனைக் கேட்டதற்கு, ''ஆமாம்! ஒரு சாயபுவும் அவர் சம்சாரமும்தான் வந்தார்கள். மத்தியானமாய் ஸ்டேஷனுக்குத் திரும்பி விடுகிறோம் என்று என்னை இருக்கச் சொல்லியிருக்கிறார்கள்'' என்றான். போலீஸ்காரர் ஊருக்குள் போய் இரண்டொரு முஸ்லிம்களை, ''ஒரு சாயபுவும் ஒரு கோஷா ஸ்திரீயும் இங்கே வந்தார்களா?'' என்று விசாரித்தார். அவர்கள், ''வந்தார்கள், வரவில்லை. நீ என்னத்திற்கு விசாரிக்கிறாய்?'' என்று சண்டைக்கு வந்து விட்டார்கள். போலீஸ்காரர் திரும்பி வந்து சாஸ்திரியிடம் சொன்னார். அவருடைய பழைய நம்பிக்கை உறுதிப்பட்டது. இருந்த போதிலும், ''நீ இங்கேயே இருந்து அந்த வண்டியில் ஒரு கண் வைத்திரு. பின்னால் வரும் போலீஸ்காரர்களை மேலே அனுப்பி விடு. நான் முன்னால் போகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார். அவரும், அந்த மப்டி போலீஸ்காரரும் மட்டும் சைக்கிளில் வந்தார்கள். மற்றவர்கள் பின்னால் நடந்து வந்தார்கள். இரு புறத்திலுமுள்ள காடுகளைத் துழாவிக்கொண்டு வந்தபடியால் அவர்கள் வருவதற்கு நேரமாயிற்று.

ஸர்வோத்தம சாஸ்திரியின் எண்ணமெல்லாம் பூங்குளத்திலேயே இருந்தது. பூங்குளத்திலும் கல்யாணியின் மீதே இருந்தது. இரகசியங்களையும்,



''புது போர்ஷன்காரர் சுத்த கருமி, கஞ்சன், அல்பம் என்றாயே! எப்படி?''
''பணத்தைத் தண்ணியா செலவு பண்ணறான்!''

மர்மங்களையும் கண்டு பிடிப்பதிலேயே ஈடுபட்டிருப்பவர்களுக்கு வேட்டை நாயிடம் உள்ள முகரும் சக்தியைப்போல், ஒருவித சக்தி உண்டாகிவிடுகிறது. ரயிலில் பாருங்களேன். வண்டியிலே முப்பத்திரண்டு பேர் உட்கார்ந்திருக்கும்போது, டிக்கட் பரிசோதகர் ஓர் ஆசாமியிடம் குறிப்பாகப் போய் டிக்கட் கேட்கிறார்! அந்த ஆசாமியிடம் டிக்கட் இருப்பதில்லை!

இம்மாதிரிதான் சர்வோத்தம சாஸ்திரிக்கும் முத்தையனுடைய இரகசியம் இந்தக் கல்யாணியிடம் இருக்கிறது என்ற எண்ணம் தோன்றி விட்டது. எனவே பரபரப்புடன் விரைந்து சைக்கிளை விட்டுக் கொண்டு சென்றார். அவர் பூங்குளத்தை நெருங்கியபோது, கல்யாணி கொள்ளிடப் படுகையிலிருந்து இடுப்பில் குடத்துடன் குளிக்காமலும் தலைவிரிக் கோலமாயும் வருவதைக் கண்டார். ''ஐயோ! இந்தப் பெண்ணுக்குச் சித்தப்பிரமையா? அல்லது பேய் பிடித்திருக்கிறதா?'' என்று அவர் திடுக்கிட்டுப் போனார். அப்போது அவளுடைய தோற்றம் அவ்வளவு பயங்கரமாயிருந்தது.

அவ்விடத்தில் லயன்கரைச் சாலையை ஒட்டி இராஜன் வாய்க்கால் ஓடிக் கொண்டிருந்தபடியால், கொள்ளிடத்தில் இருந்து வருகிறவர்கள் லயன் கரைச் சாலையைத் தாண்டியதும் கொஞ்ச தூரம் கீழே இறங்கிப் போய், வாய்க்காலின் மீது போடப் பட்டிருக்கும் மூங்கில் பாலத்தின் வழியாக அக்கரை செல்ல வேண்டும். அப்புறம் சாதாரண

கால் நடைப் பாதை வழியாகச் சுமார் கால் மைல் தூரம் போனுல்தான் பூங் குளத்தை அடையலாம்.

✻ ✻ ✻

கல்யாணி இப்போது லயன் கரைச் சாலையைத்தாண்டிக் கொண்டிருந்தாள். அவளுடைய வாய் ஏதோ முணு முணுத் துக் கொண்டிருந்தது. அவள் என்ன சொல்கிருள் என்பது சாஸ்திரியின் காதில் விழா விட்டாலும், அவை ஏதோ காரமான வசைச் சொற்கள் என்று மட்டும் ஊகிக்க முடிந்தது. அவ் வளவு சமீபத்தில் வந்திருந்த சாஸ்-திரியை அவள் கவனிக்கவில்லை. உண் மையில், அவளுக்கு எதிரில் உள்ளவை கூட அவள் கண்ணுக்குத் தெரியவில்லை யென்று தோன்றிற்று. அப்படித் தட் டுத் தடுமாறி நடந்தாள். சாலையைத் தாண்டியதும், பள்ளத்தில் இறங்க வேண்டுமல்லவா? அந்த இடத்தில் பள்ளம் என்பதைக் கவனிக்காமலே அவள் காலை எடுத்து வைத்தாள். திடீ ரென்று கீழே விழுந்தாள். இடுப்பில் இருந்த குடம் தவறி விழுந்து, 'டண் ணூர்' 'டண்ணூர்' என்று சப்தித்துக் கொண்டே உருண்டு இராதன் வாய்க் காலில் பிரவாகத்துக்கருகில் போய்த் தண்ணீரைத் தொட்டுக் கொண்டு நின் றது. குடம் உருண்ட வேகத்தில் அதற் குள்ளிருந்த பொட்டணம் வெளியே வந்து, தண்ணீரில் விழுந்தது. விழும் போதே அந்தப் பொட்டணம் அவிழ்ந் தும் போயிற்று. மீன்கள் திரண்டு வந்து முத்தையனுடைய மத்தியானச் சாப் பாட்டை ருசி பார்த்துச் சாப்பிடத் தொடங்கின.

இவ்வளவும் நடந்தது அரை நிமிஷ நேரத்தில். கல்யாணி லயன் கரைச் சரிவில் நிமிர்ந்து உட்கார்ந்தபடி சுற்று முற்றும் பார்த்தாள். இதற்குள் சாஸ் திரி கீழே ஓடிச் சென்று குடம் பிர வாகத்தில் போய்விடாமல் எடுத்தார். குடத்தை அவர் ஒரு கையால் எடுக்கும் போது இன்னொரு கையால் தண்ணீரில் கிடந்த சோற்றுப் பொட்டணத்தை நன் ருய்ப் பிரவாகத்தில் இழுத்து விட்டு விட்டார்.

குடத்தை எடுத்துக் கொண்டு வந்து கல்யாணியின் பக்கத்தில் வைத்த சாஸ் திரி, ''என்ன, அம்மா, இது? ஏன் இப்படி விழுந்து விட்டாய்?'' என்று கேட்டார். கல்யாணி பதில் சொல்லா மல் திருதிருவென்று அவரைப் பார்த்து விழித்தாள்.

''குடத்திலிருந்த சாப்பாடு ஆற்றேடு போய்விட்டதே? யாருக்காக அம்மா சாப்பாடு கொண்டு வந்தாய்?'' என்று கேட்டார் சாஸ்திரியார்.

அதைக் கேட்ட கல்யாணி ஒரு விநாடி அவரை உற்றுப் பார்த்துவிட்டு, ''ஹஹ் ஹஹ் ஹஹா'' என்று சிரித் தாள். அவ்வளவு பயங்கரமும்சோகமும் கலந்த சிரிப்பை அதற்கு முன் சாஸ்திரி கேட்டதே கிடையாது. அவருக்கு மயிர் கூச்செறிந்தது. ''யாருக்காகவா? சாப் பாடு யாருக்காகவா?'' என்று கல் யாணி முணு முணுத்தது அவருடைய உடம்பைப் பதறச் செய்தது.

ஆனாலும் அவர் விடவில்லை. நெஞ்சை வயிரமாக்கிக் கொண்டு மேலும் சொன் ஞர்:''உன்னைப் போன்ற சிறு பெண்கள் உச்சி வேளையில் இங்கெல்லாம் வரக் கூடாது அம்மா! படுகைக் காட்டில் திருடன் முத்தையன் ஒளிந்து கொண் டிருப்பது தெரியாதா உனக்கு? அவ னுக்கு இந்தப் பக்கத்திலேதான் யாரோ காதலி ஒருத்தி இருக்காளாம். அவள் தான் அவனுக்குச் சாப்பாடு போடுகிரு ளாம். முதலிலே, நீதான் அந்தக் கள்வனின் காதலியோ என்று கூட நான் சந்தேகித்து விட்டேன்....''

சாஸ்திரி இம்மாதிரிக் கூறியதைக் காட்டிலும் கல்யாணியின் நெஞ்சில்



உறவினரை அழைத்து வர செகந் தராபாத் ரயில் நிலையத்துக்குச் சென் றிருந்தோம். ஸ்டேஷனில் போலீஸ் கூட்டமாக இருந்தது. சற்று நேரத் தில் கோதாவரி எக்ஸ்பிரஸில் முதல் மந்திரி திரு என்.டி. ராமராவ்வந்து இறங்கினர்.

ஆச்சரியம்! முதல் மந்திரி ஏஸ். வகுப்பிலோ, முதல் வகுப்பிலோ வராமல் இரண்டாம் வகுப்புப் பெட் டியில் வந்தார்! எளிமை, சிக்கனம் இவற்றுக்குப் பிறருக்கு எடுத்துக்காட் டாக விளங்கியது இந்நிகழ்ச்சி.

—வி. குமார்

# இதோ! ஒரு புதிய இருமல் நிவாரணி ஒரு பெரிய வித்தியாசத்துடன்...

# காஃப்ரெம்-5

## மூலிகைகளாலான இருமல் நிவாரணி

## சக்தி வாய்ந்தது மட்டுமல்ல தீய பின் விளைவுகள் இல்லாததும் கூட.

இருமல் ஏற்படுவது இயற்கையே. ஆனால் அளவுக்கு அதிகமாக இருமுவது நல்லதல்ல. இருமலைக் கட்டுப்படுத்த, நிச்சயமாக நிவாரணம் அளிக்கும் ஓர் இருமல் மருந்து தேவை. ஆனால் அதே சமயம் அதனால் தூக்கம், வாய்-தொண்டை உலர்வது, வாந்தி முதலிய தீய பின் விளைவுகள் எதுவும் ஏற்படவும் கூடாது.

**காஃப்ரெம்-5 மூலிகைகளாலான இருமல் நிவாரணி.**



காஃப்ரெம்-5 இயற்கை தரும் மூலிகைகள் அடங்கியது. எனவே தூய்மையானது; மென்மையானது. தீய பின் விளைவுகள் ஏதும் இல்லாதது. அதே ச 'யம் அதிக சக்தி வாய்ந்தது. நிச்சய நிவாரணம் அளிப்பது. ஐந்து மூலிகைகள் இதில் உள்ளன: ஆடாதோடை, கிருஷ்ண துளசி, மா மஞ்சள், மஞ்சள் மற்றும் அதிமதுரம். இருமலைக் கட்டுப்படுத்தி, நிவாரணம் அளிப்பதில் இவற்றின் திறன் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

**காஃப்ரெம்-5 செயல்திறன்— இருமலை நன்கு கட்டுப் படுத்துகிறது.**



காஃப்ரெம்-5 விரைவாகவும் இதமாகவும் செயல்பட்டு, தொண்டையில் புண்ணையும் எரிச்சலையும் தணிக்கிறது; சுவாசப் பாதையை விரிவாக்கி, அடைப்புகளை நீக்கி எளிதாக சுவாசிக்க உதவுகிறது.

**காஃப்ரெம்-5 வித்தியாசமானது.**

காஃப்ரெம்-5 முற்றிலும் வேறுபட்டது. ஏனென்றால் இது முழுமையாக மூலிகைகளாலேயே ஆனது. இதில் ஆல்கஹாலோ, தூக்கம்-மயக்கம் உண்டாக்கும் பொருள்களோ இல்லை. எனவே இது மிகவும் பாதுகாப்பானது. தீய பின் விளைவுகள் எதுவும் இதனால் ஏற்படாது.

**காஃப்ரெம்-5 அனைவருக்கும் ஏற்றது.**

காஃப்ரெம் 5 முழுமையாக மூலிகைகளால் தயாரிக்கப் பட்டிருப்பதால் இது குடும்பத்தில் அனைவருக்கும் ஏற்றது. மிகவும் பாதுகாப்பானது. சிறு குழந்தைகளுக்கும் கூடக் கொடுக்கலாம். இதன் இனிமையான சுவையை அவர்கள் மிகவும் விரும்புவார்கள்.



**காஃப்ரெம்-5 சிறந்த பொருள்களுக்குப் பெயர் பெற்ற டிடிகே குரூப் வழங்குவது.**

தேர்ந்தெடுத்த மூலிகைகளாலான இணையற்ற தயாரிப்பு.




# காஃப்ரெம்-5

## சக்தி வாய்ந்தது. பாதுகாப்பானது. இயற்கையானது.

தற்போது தமிழ்நாட்டில் மட்டுமே கிடைக்கும்.

ஒரு TTK தயாரிப்பு

HTM-TTK-1060

கூரிய ஈட்டியைச் செருகியிருக்கலாம். ஆனால் ஈவிரக்கம் பார்த்தால் இந்தக் காலத்தில் சரிப்படுமா? உத்தியோகத்தில்தான் பிரமோஷன் கிடைக்குமா? அவர் உத்தேசித்த பலன் கைமேல் கிடைத்து விட்டது. கல்யாணி எழுந்து நின்றாள். ஆவேசம் வந்தவள் போல் பேசினாள். ''நானா கள்வனின் காதலி? இல்லவே இல்லை. சத்தியமாய் இல்லை! அவனுடைய காதலி வேறொருத்தி இருக்கிறாள். அதோ அந்தக் காட்டுக்குள்ளே இருக்கிற பாழும் கோவிலுக்குப்போனால் தெரியும். காதலனும் காதலியும் அங்கு கட்டித் தழுவிக்கொண்டிருக்கிறார்கள்!''

இப்படிச் சொன்ன கல்யாணிக்கு உடனே, ''ஐயோ! என்ன காரியம் செய்தோம்?'' என்று தோன்றியிருக்க வேண்டும். உதடுகளைக் கடித்துக் கொண்டாள். ஒரு நிமிஷம் பொறுத்து ''ஐயா! நீங்கள் யார்?'' என்று கேட்டாள்.

சாஸ்திரியின் முகத்தில் ஒரு சிறு மாறுதலும் ஏற்படவில்லை. ''ஏனம்மா என்னைத் தெரியாதா? நான் இந்தக் கொள்ளிடக்கரை மேஸ்திரி. எனக்கென்னத்திற்கு இந்தத் தொல்லையெல்லாம்? உனக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது. மூங்கில் பாலத்தைத் தாண்டி ஜாக்கிரதையாகப்போய்ச்சேர். நானும் என் வழியே போகிறேன்'' என்றார்.

கல்யாணி, ''ஐயா! நிஜமாய்ச் சொல்லுங்கள். நீங்கள் போலீஸ்காரர் இல்லையே?'' என்று கேட்டாள். ''என்னைப் பார்த்தால் போலீஸ்காரன்மாதிரி இருக்கிறதா?'' என்றார் சாஸ்திரி.

கல்யாணி குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு மூங்கில் பாலத்தைத் தாண்டி ஊரை நோக்கிச் சென்றாள். அவளுக்குத் தெரியும்படியாக சாஸ்திரியும் லயன் கரைச் சாலையோடு கொஞ்ச தூரம் போனார்.

❋ ❋ ❋

மூத்தையன் இருக்கும் இடம் இது தான் என்று சாஸ்திரிக்கு நிச்சயமாய்த் தெரிந்து விட்டது. ஆனால் கல்யாணியின் மர்மம் இன்னதென்று முழுவதும் விளங்கவில்லை. அதைப் பற்றிப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போது அந்தப் பெண் இங்கே இருந்தால் காரியத்துக்கு ஏதாவது இடையூறு ஏற்படுமென்று எண்ணித்தான் அவளைப்போகச் செய்தார்.

அவர் இராஜன் வாய்க்காலைத் தாண்டி, அக்கரையில் முடுக்குத் திரும்புவதும், இங்கே சாலையில் போலீஸ்காரர்கள் வந்து சேர்வதும் சரியாக இருந்தது. சாஸ்திரி சட்டென்று ஒரு சீட்டு எழுதி, அந்தப் போலீஸ்காரர்களில் ஒருவனிடம் கொடுத்து, ''ஓடு! என் சைக்கிளை எடுத்துப் போ! பாச்சாபுரத்தில் இருப்பவனிடம் கொடுத்து, உடனே போய் ராயவரம் போலீஸ் ஸ்டேஷனில் இந்தச் சீட்டைக் கொடுத்து விட்டு வரச் சொல்லு. அவன் கோஷா ஸ்திரீயைத் தேடியது போதும். கோஷாவும் ஆயிற்று, சாயபுவும் ஆயிற்று'' என்றார். அவன் அப்படியே ஸைக்கிளில் விரைந்து சென்றான். பாக்கியிருந்த ஐந்து கான்ஸ்டேபிள்களையும் பார்த்து சாஸ்திரி, ''துப்பாக்கிகளில் மருந்து கெட்டித்துத் தயாராய் வைத்திருக்கிறீர்களா? வேட்டை நெருங்கிவிட்டது!'' என்றார்.

(தொடரும்)



அமெரிக்க, பிரெஞ்சு, ரஷ்ய ஜனாதிபதிகள் கடவுளைச் சந்திக்கிறார்கள்.

கடவுளிடம் அமெரிக்க ஜனாதிபதி கேட்கிறார்: 'அமெரிக்க மக்கள் எப்போது முழு மகிழ்ச்சி அடைவார்கள்?'

'ஐம்பது ஆண்டுகளில்' என்கிறார் கடவுள்.

அமெரிக்க ஜனாதிபதி 'ஐம்பது ஆண்டுகளா?' என்று அழுதபடி செல்கிறார்.

அடுத்ததாக பிரெஞ்சு ஜனாதிபதி தன் நாட்டு மக்கள் மகிழ்ச்சி அடைவது எப்போது என்று கடவுளைக் கேட்கிறார்.

'நூறு வருடங்களில்' என்கிறார் கடவுள். அவரும் அழுதபடி செல்கிறார்.

ரஷ்யத் தலைவர் 'ரஷ்யர்கள் முழு மகிழ்ச்சி அடைவது எப்போது?' என்று கடைசியாகக் கேட்கிறார்.

கடவுள் அழுதபடி அந்த இடத்தை விட்டு மறைகிறார். —எஸ். சுமதி

**ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!**
**போர்ன்விடா பருகுங்கள்.**

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க காட்பரிஸ் போர்ன்விடா வழங்குங்கள். கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளது, போர்ன்விடா— உங்கள் குடும்பத்தினருக்கு அன்றுடம் இருவேளை வழங்குங்கள்.




OBM/8846 R-TAM.

காட்பரிஸ்
**போர்ன்விடா** உங்களோடு வளரும் நன்மை

# 'வீடியோ'வரை காத்திரு!!!

கதை: ஜே.எஸ்.ராகவன் சித்திரம்: செல்லம்
















ஆமா ஜூஜி! அபின் கஞ்சா இதெல்லாம் கடத்தற வேலைதான் டில்லிபாபுக்கும் யோகேஷுக்கும்.
இதிலே அவ்வளவு பணம் இருக்கா?


இல்லியா பின்னே! இதை மரியாதை யில்லாம 'கஞ்சா'ன்னு கூப்பிடக் கூடாது!
சுரேஷ்! சரக்கைத் தோணியிலே ஏத்த அம்பு அப்பாகிட்டே சொல்லச் சொன்னாங்களே, இப்போ... அ... அவரும் இதிலே இன்வால்வ்டா...


பளிச்சென்று லைட் எரிகிறது. யோகேஷும், டில்லிபாபுவும் வருகிறார்கள்.
டேய்! நீ யார்டா? தொப்பி ஆள் எங்கே?
'தொப்பி' கோப்பி குடிக்கப்போயிருக்கு. நான் கஞ்சா அடிக்க வாம்னு வந்தேன்!


யோகேஷ், சுரேஷைத் தாக்க வர....
இந்தா ரொம்ப நாளா ட்டூ... இதான் 'கேட்லாங்டா' அடி.... கொரியாவிலே ..பேமஸ்...
ஐயோ!


இது உனக்கு. கொஞ்சம் வயசானவர் அதுக்குச் சிம்பிளா....
ஹா!


இருவரையும் கட்டிப்போட்டுவிட்டு......
வா ஜூஜி! கஸ்டம்ஸ் ஸ்ராக்கோருக்கு போன் பண்ணனும்... பாத்தியா எம்.ஜி.ஆர் மாதிரி ஒரு ஹீரோயினைக் காப்பாத்திட்டேன்...
தொடரும்

உண்மைக் கதை

# பலவீனங்கள்



சுப்ரபாலன்

**ஒவ்வொரு துறையிலும் பலருக்குப் பலவிதமான அனுபவங்கள் ஒரு டாக்டர் தன்னால் மறக்க முடியாத அனுபவம் என்று குறிப்பிட்டதை இங்கு கற்பனைக் கதைவடிவில் தருகிறோம்.**

இரவு மணி பன்னிரண்டைக் கடந்து விட்டிருந்தது. வழக்கத்தை விடவும் கூடுதலாக விழித்திருந்துவிட்டு அப்போதுதான் கண்ணயர்ந்திருந்தார் டாக்டர்.

கணகணத்து அமைதியைக் குலைத்த டெலிபோனை எடுத்தவர் டாக்டரின் மனைவி. எழுப்பலாமா வேண்டாமா என்கிற பேச்சுக்கே இடமில்லை. எழுப்பியாக வேண்டும்.

'ப்ளீஸ் வெயிட்' சொல்லி ரிஸீவரைக் குறுக்காய் வைத்துவிட்டு அவரை எழுப்பினார்.

அது என்ன தூக்கமோ? கோழித் தூக்கம், பூனைத் தூக்கம்... சடக்கென்று எழுந்து வந்து ரிஸீவரைக்கையில் எடுத்தார் டாக்டர்.

''டாக்டர்... உடனே இங்கே வரணும். நான்தான் சங்கரி பேசறேன். போனிலே எதையும் சொல்ற மாதிரி இல்லே. ப்ளீஸ்...''

அவசரம் அவசரமாய்க் கைப் பெட்டியை எடுத்துக் கொண்டு காரைக் கிளப்பியபோது, கண்களைத் தூக்கம் அழுத்தியது. சமாளித்துக்கொண்டு காரை ஓட்டினார். அந்த வீட்டை அவர் அடைந்தபோது—

அநேகமாக எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. வாசல் பக்கம் தெருவில் இரண்டு மூன்று பேராய்க் கூடிக் கசமுச என்று பேசிக் கொண்டிருந்தார்கள். டாக்டரின் கார் அந்த வீட்டு வாசலில் போய் நின்றபோது அவரவர்கள் தங்கள் பக்கம் விலகிக் கொண்டார்கள்.

கூர்க்கா கதவைத் திறக்கவும், உள்ளேயிருந்து சங்கரி ஓடிவரவும் சரியாக இருந்தது. அழுதுகொண்டே 'குட்மார்னிங்' சொல்லி வரவேற்றாள் அவள். வயசு பன்னிரண்டுதான். ஆனாலும் தெரியாத விவரமில்லை. பள்ளிக்கூடச் சூழ்நிலை பகட்டான வீட்டுச் சூழ்நிலை அப்படி.

''ஸாரி டாக்டர்... இவ்வளவு ராத்திரியிலே சிரமப்படுத்த வேண்டியதாயிடுத்து...'' விம்மலுடன் நடந்த அவளின் தோளில் செல்லமாகத் தட்டிக் கொடுத்து உள்ளே சென்றார் டாக்டர். அங்கே அவர் கண்ட காட்சி?

அலங்கோலமாகச் சாய்ந்து கிடந்தார் சபேசன். தரையில் ஒரு பக்கமாய்ப்படுத்து அழுது கொண்டிருந்தாள் சீதா. கண்களைத் துடைத்துக்கொண்டு அவள் எழுந்து உட்கார்ந்தாள். நெற்றியில் சிறியிருந்த காயத்திலிருந்து இன்னும் ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. 'நான்தான்' என்று சாட்சி சொல்லுகிற மாதிரி உடைந்து போய்க் கிடந்தது கண்ணாடி டம்ளர். பக்கத்தில் பாட்டில்கள்.

அவளுடைய காயத்தைச் சுத்தம் பண்ணி மருந்து போட்டுப் பிளாஸ்டரை ஒட்டிவிட்டு எழுந்தபோதும் சபேசன் அசையாமல் இருந்தார். தட்டி எழுப்பியபோதும் அவரால் ஒரு நிதானத்துக்கு வர முடியவில்லை, சரிந்து விழுந்தார்.




''தெருவிலே விழுந்து கிடந்தாராம் டாக்டர். யாரோ இவா கம்பெனியிலே வேலை பாக்கிறவா அவா கொண்டு வந்து விட்டுட்டுப் போறா... என்ன இதெல்லாம் அசிங்கமா இல்லையான்னு கேட்கப் போக வந்தது இதெல்லாம்... அப்படித்தான் என் இஷ்டம் குடிப்பேன்னு சொல்லி இன்னும் எடுத்துக் குடிக்கிறார்....''

மனசுக்குள் சிரித்துக் கொள்ளத்தான் முடிந்தது டாக்டருக்கு. எவ்வளவு பெரிய பொறுப்பான மனிதர். இவருக்குப் போய் இப்படி ஒரு நிலையா என்று நினைக்கவே கஷ்டமாக இருந்தது.

''ஒண்ணும்வருத்தப்படாதீங்கோ. தானாத்தான் தெளியணும். அப்படியே கிடக்கட்டும். காலம்பற அவர் எழுந்ததும் நான் இப்ப வந்துட்டுப் போனேன்னு மாத்திரம் அவர் கிட்டச் சொல்லுங்கோ. போதும்'' என்று சொல்லிவிட்டு வெளியே வந்தார் அவர்.

**கா**லையில் பத்து மணி சுமாருக்கு டாக்டர் எதிர்பார்த்தபடி சபேசன் வந்தார். கூடவே சீதாவும் சங்கரியும். குற்ற உணர்வு முகத்தில் பசையாய் அப்பியிருந்தாலும் அதைச் சமாளித்துக் கொண்டே சிரித்துக் கொண்டார்.

''சங்கரி! எப்படி இருக்கே... உள்ளே போய் மாமி கிட்டப் பேசிண்டிரு. அப்புறமா உன்னைக் கூப்பிடறோம்.''

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவள் போனாள். பாவமாக இருந்தாலும், அவள் அங்கு தேவையில்லை என்று தோன்றியது.

''வெரி ஸாரி டாக்டர்! சீதா சொன்னது எல்லாம். நினைச்சுப் பார்த்தா ரொம்ப வெட்கமா இருக்கு. வேறே வழி ஒண்ணுமில்லியே டாக்டர். கம்பெனி செலவிலே பிரிட்ஜ் நிறைய வந்து அடுக்கிட்டுப் போறான். வர்றவாளுக்குக் கம்பெனி கொடுக்கறதுக்காக நானும் குடிக்க வேண்டி ஆயிடறது. கண் முன்னாலே இதையெல்லாம் அடுக்கி வச்சிண்டு எப்படி டாக்டர் நான் சாமியாரா ஆயிட முடியும்?''

''மிஸ்டர் சபேசன், இதை நிறுத்தியே தான் ஆகணும். குழந்தைக்குப் பன்னிரண்டு வயசாயிடுத்து. இனிமே அவளோட எதிர்காலம் பாதிக்கப்படாம இருக்கணும்னு நீங்க இந்தச் சனியனையெல்லாம் விட்டுட்டு இயல்பா மாறிண்டாகணும்.''

''ட்ரை பண்றேன் டாக்டர்! அட்லீஸ்ட் இவா முன்னாலேயாவது குடிக்காமல் இருக்க முயற்சி செய்கிறேன்.''

**இ**ந்தச் சம்பவம் நடந்து ஒரு வாரம் கழித்து டாக்டரே போன் பண்ணினார். மறுமுனையில் துள்ளலுடன் பேசியவள் சங்கரிதான்.

''அன்னிக்கி அப்பறம் அப்பா அப்படியெல்லாம் நடந்துக்கிறதில்லே டாக்டர். இப்பக்கூட அப்பாவும் அம்மாவும் பீச்சுக்குப் போயிருக்கா. எனக்கு நாளைக்கு டெஸ்ட் இருக்கு... படிக்கணும்னு சொல்லி நான் போகல்லே டாக்டர்.''

குழந்தை துள்ளலுடன் பேசினாலும் முழு மகிழ்ச்சி கொள்ள முடியவில்லை டாக்டரால். இதுபோன்ற பல அனுபவங்கள் அவருக்கு உண்டு. பத்தரை மணிக்கு அது நிஜமாயிற்று. சற்று முன்னால் துள்ளலுடன் பேசிய அதே குழந்தைக் குரல் இப்போது மறுபடியும் விம்மியது. ஆனால் ரகசியமாக.

''டாக்டர்... அப்பாவும் அம்மாவும் வந்தாச்சு டாக்டர். இப்ப அம்மாவும் ஆடிண்டு வரா... என்ன டாக்டர் இது.... எனக்குப் பயமா இருக்கே....''

''ஷ்... பட்னு போனை வச்சடு சங்கரி... ஒன்னும் பயப்படாதே. நீ ஒன்னையும் பார்த்ததாகக் காட்டிக்காதே. காலம்பற பார்க்கலாம்.'' என்று சொல்லிப் போனை வைத்தார் டாக்டர்.

போனில் சங்கரி சொன்ன விஷயம் அவரை உலுக்கவே செய்தது. இது ஓரளவுக்கு அவர் எதிர்பார்த்ததுதான்.

அன்று ஒரு சனிக் கிழமை. முன்னறிவிப்பு ஏதும் இல்லாமல் முந்தைய இரவில் சங்கரி சொன்ன தகவலையும் தெரிந்ததாய்க் காட்டிக் கொள்ளாமல் திடும் என்று போய் நின்றபோது. அங்கே டாக்டருக்கு வியப்புத் தான் காத்திருந்தது.

ஊதுவத்தி, சாம்பிராணிப் புகைகளின் மணமும், புஷ்பங்களின் மணமும் அமர்க்களப்பட்டது. அப்போதுதான் வேங்கடாஜலபதி பூஜையை முடித்து விட்டுப் பக்தி பழமாக ஹாலுக்கு சபேசன் வந்தார்.

''வாங்கோ... வாங்கோ... ஏது... இந்தப் பக்கம் இவ்வளவு காலம்பற....'' என்று சபேசன் ரொம்பவும் இயல்பாகக் கேட்டதும், சீதா வழக்கம்போல் புன்னகையுடன் வரவேற்றதும் டாக்டருக்குக் குழப்பத்தை உண்டுபண்ணின.

''ஒன்னுமில்லே... இந்தப் பக்கம் வரவேண்டியிருந்தது. அப்படியே உங்களையும் பார்த்துட்டுப் போகலாமேன்னு வந்தேன்.'' ஒரு பொய்தான் மூலதனம். பொய்யான மனிதர்களிடம் இதுதான் விலை போகும் என்று எண்ணினார் டாக்டர்.

குண்டுக் கண்களை விழித்துப் பார்த்தபடி புத்தகத்தைப் புரட்டுகிறதாய்க் கதை பண்ணிக் கொண்டிருந்தாள் சங்கரி. அவள் விவரம் தெரியாதவள் இல்லை. அவள் ஃபோனில் சொன்னது பொய் இல்லை என்பது டாக்டருக்குத் தெரிந்தாலும் வேஷம் போடுகிற தம்பதிகளிடம் எப்படிக் கேட்பது?

''மிஸ்டர் சபேசன்! கம்ப்ளெயிண்ட் ஒன்றுமில்லையே இப்போ... ஹாபிட் எல்லாம் குறைச்சண்டாச்சா?''

சுருக்கென்று முள் குத்தப்பட்டது போல் தவித்தார் சபேசன். ''இப்ப ஒரு மாதிரி அட்ஜெஸ்ட் பண்ணிண்டு வரேன் டாக்டர். முன்னே மாதிரி இல்லே. சந்தேகம்னா சீதாவைக் கேளுங்கோ... என்ன சீதா?''

சீதா மௌனமாகச் சிரித்தாள். 'நானும் வசமாகி விட்டேன்' என்பதா அதன் பொருள்?

''அப்படின்னா ரொம்ப சந்தோஷம். நான் வெறுமனே மருந்து கொடுக்கிற டாக்டர் மட்டுமில்லே சபேசன். மனசையும் பல ஹீனமில்லாமப் பண்ணனுமில்லியா? அன்னிக்கு நடந்த சம்பவம், வாசல்லே யார் யாரோ நின்னு வேடிக்கை பார்த்தது எல்லாம் நினைவிருந்தாச் சரி... நான் வரேன்.'' என்று சொல்லிவிட்டு ஒருவித ஏமாற்றத்துடன் புறப்பட்டார் டாக்டர்.



டைப்பிஸ்ட்: ''எதுக்கு ஸார் சும்மா சும்மா என்னைக் கூப்பிடறீங்க?''
மானேஜர்: ''பவர் கட்டால் ஏ.ஸி. இயங்கலே. நீ உள்ளே நுழையறபோதெல்லாம் இந்த அறை ஜில்லு ஜில்லுன்னு ஆயிடுது!''

—உ. ராஜாஜி

இந்தநாடகம் அதிகநாட்கள் நீடிக்கவில்லை. ஒன்றிரண்டு மாதங்களிலேயே நிலைமை தீவிரப்பட்டுப் போனது. குழந்தை சங்கரியே அடிபடுகிற அளவுக்கு மோசமானது.

மறுபடியும் முன்போல் பத்துப் பன்னிரண்டு மணிக்கு அவள் போன் பண்ணினாள். ''டாக்டர்... ரொம்ப அசிங்கமா நடந்துக்கறா டாக்டர்... ரெண்டு பேரும் நெனைவில்லாமக் கெடக்கிறா. இப்ப வந்து பார்த்தாப் போறும் டாக்டர். இப்படியே போனா நான் வீட்டை விட்டே எங்கியாச்சும் ஓடிடறதுதான் சரின்னு தோணறது டாக்டர். இன்னிக்கு அம்மாவே போடி சனியனேன்னு இட்டித் தலையிலே குட்டினா டாக்டர்... ப்ளீஸ் வர முடியுமா?''

டாக்டர் படியேறியபோது எதிரே வந்தாள் சங்கரி. ''அம்மா விழிச்சண்டுட்டா டாக்டர். இன்னிக்கு உங்களைப் பார்த்ததும் ஏதோ நடக்கப் போறது டாக்டர்... ஏன் டாக்டரைக் கூப்பிட்டேன்னு என்னை நீங்க போனப்புறம் உரிச்சுடப் போறேளோன்னு பயமா இருக்கு... உங்ககூட வந்துடறேனே டாக்டர்.''

அவளை அமைதிப் படுத்தி அழைத்துக் கொண்டு உள்ளே போனபோது சீதா முகம் கழுவிக் கொண்டு வந்தாள். ஸோஃபாவில் சபேசன் இன்னும் சுருண்டுதான் கிடந்தார்.

''வாங்க டாக்டர்... என்னே மன்னிச்சுடுங்கோ... எனக்கு வேறே வழியில்லே. இவர்கிட்ட அடிபட்டு அவமானப்படறதை விட இது பரவாயில்லையோன்னு தோணித்து.

இனிமே இவரை வழிக்குக் கொண்டு வர முடியாது டாக்டர். என் தலைவிதி குழந்தையோட அதிர்ஷ்டம்னு விட்டுடுங்கோ... வெரி ஸாரி....''

''அதுக்காக மட்டுமில்லேம்மா. குழந்தை கூப்பிட்டப்ப வரமாட்டேன்னு சொல்ல முடியல்லே... அது தப்பும் கூட இல்லியா? அஃப்கோர்ஸ், இது ஒண்ணும் வியாதி இல்லே. ஆனாலும் உங்க குடும்பமும், கௌரவமும் என் கண் முன்னாலேயே நாசமாறதை எப்படிம்மா பார்த்திண்டு இருக்க முடியும்? ஆல்ரைட்... ஒரே வழிதான் தோணறது. காலம்பற அவர் எழுந்திருந்த உடனே எனக்குப் போன் பண்ணச் சொல்லுங்கோ... நான் பார்த்துக்கறேன்.''

விடுவிடுவென்று படியிறங்கிக் காரில் ஏறிப் புறப்பட்டு வீடு வந்து சேருகிற வரை அதற்கு அப்புறம் தூக்கத்தின் பிடியில் அகப்படுகிற வரை டாக்டரின் மனம் படாத பாடு பட்டது.

மறுநாள் காலையில் சொன்னபடி போன் வந்தது. இயல்பாகப் பேசினார் சபேசன். ஒன்றுமே நடக்காத மாதிரி ஒரு கலகலப்பு. அதில் தாமும் ஐக்கியமானார் டாக்டர்.

''என்ன மிஸ்டர் சபேசன், பூஜை ஆயிடுத்தா? விசேஷம் ஒண்ணுமில்லியே?''

''ஸாரி டாக்டர்... நேத்திக்குக் கொஞ்சம் டிரக் உள்ளே போயிடுத்து... இனிமே விட்டுடறேன் டாக்டர்.... ப்ளீஸ்....''

''அதுனால பரவாயில்லே... நான் கூப்பிட்ட விஷயம் வேறே... சாயங்காலம் நான், ஜீவா ரெண்டு பேரும் திருப்பதிக்குப் போறோம். கூட நீங்களும் வர முடியும்னா நன்னா இருக்கும். குழந்தையும் லைக் பண்ணுவா இல்லே.... அதான் பேசச் சொன்னேன்.....''

மனிதருக்கு அளவு கடந்த உற்சாகம் கரை புரண்டது குரலில் கேட்டது. ''கண்டிப்பா வரோம் டாக்டர். இதுக்கென்ன... நானே யோசிச்சேன். ஒரு நடை போயிட்டு வரலாமேன்னு.''

இந்த மனிதரை மடக்க இதுதான் வழி என்று டாக்டர் உணர்ந்திருந்தார். திருப்பதிப் பயணத்தில் தெய்வ தரிசனம் முக்கியமில்லை டாக்டருக்கு. அவருடைய பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சபேசனுக்கு எத்தனையோ பலவீனங்கள் மாதிரி பக்தியும் ஒரு பலவீனம் தான். ஏழுமலையான் சன்னிதியில் டாக்டர் கேட்டபோது அவரால் மீற முடியவில்லை.

''சத்தியமா இனிமேல் லிக்கரைத் தொடமாட்டேன் டாக்டர்... ஏழுமலையான் முன்னாலே சொல்றேன்...'' அந்தச் சந்நிதியில் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் வாங்கிய அந்த உறுதிமொழி எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பது பின்னால்தான் தெரிந்தது.

முதல் காரியமாகக் கம்பெனியில் தாம் வகித்த பொறுப்பை வேறு நிலைக்கு மாற்றிக் கொண்டார். 'இனிமேல் யாருக்கும் கம்பெனி தருகிறேன்,''ட்ரீட் தருகிறேன்' என்று இவரும் நச்சரிக்க வேண்டியிராது.

சொன்னால் சொன்னபடி டாக்டர் முன்னாலேயே வீட்டில் இருந்த பாட்டில்கள். அதற்கான கிண்ணங்கள் எல்லாவற்றையும் உடைத்துப் போட்டார்.

''டாக்டர்.. யு ஹேவ் பேவ்ட் எ நியூ வே டு மீ....'' கை குலுக்கிப் பாராட்டினார். விருந்து கொடுத்தார்.

அடுத்த சில வருஷங்களில் — மிகவும் கடுமையான பிடிவாதத்தால் அந்தப் பழக்கத்திலிருந்து தப்பித்துக் கொண்டார்.

ஆனால்—

சற்றும் எதிர்பாராத நிலையில் அதிர்ச்சியான ஒரு செய்தி:

''டாக்டர் மறுபடி வேதாளம் மரம் ஏறியாச்சு... அதுவும் பகல் நேரத்துலே... வாங்களேன்....'' பேசியது சீதாதான்.

மனம் தளர்ந்து போனவராய் டாக்டர் அந்த வீட்டுக்குப் போனபோது அதே நிலையில் ஸோபாவில் சுருண்டுகிடந்தார் சபேசன்.

''இப்பத்தான் டாக்டர் வெளியிலே இருந்து வந்தார்... வந்தவுடனே இப்படி விழுந்தாச்சு... என்ன மனுஷன்.. சே!'' அலுத்துக் கொண்டாள் சீதா.

ஏதோ ஒரு சந்தேகம் உறுத்த அருகே சென்று பார்த்தபோது—

சபேசன் என்கிற மனிதர் அடங்கி யிருந்தார்.

''அம்மா... இது லிக்கர் இல்லே. அவர் சத்தியத்தை மீறல்லே... வெரி ஸாரி... இருதயம் நின்னு போயிருக்கு....''

அடுத்த நிமிடங்களில் அங்கு வெடித்த அழுகையில் தாமும் கலந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது டாக்டருக்கு.

அளவுக்கு மீறிய குடிப் பழக்கம் காரணமாய் இப்படி இருதயம் பலவீனமடைந்து பழக்கம் நின்ற பிறகும், மரணம் வருவதைத் தவிர்க்க முடியாமல் போய்விட்டதே என்கிற வருத்தம் அவரை உலுக்கியது.



# தண்ணீ வண்டி வந்திருச்சு!

அறிவிப்பு ஒலித்ததும் அழுது வடிந்து-கொண்டிருக்கும் எங்கள் தெரு திடீர் சுறு சுறுப்புப் பெறுகிறது. கரை புரண்டு ஓடும் இந்த உற்சாகத்திலேயே முங்கிக் குளித்து விட்டு ஆபிசுக்குக் கிளம்பப் பார்க்கிறார் எதிர் வீட்டு ராமாமிர்தம்.

''ஆமா! என்னைத் தவிக்க விட்டுட்டுப் போயிடுங்கோ! இந்த ஒரு விஷயத்திலாவது கொஞ்சம் உதவி பண்ணப்படாதா? புருஷாளோட முட்டி மோதின்டு என்னாலே தண்ணி பிடிக்க முடியுமா?'' என்று கேட்டு ஒரு குடத்தை அவர் கரத்தில் திணிக்கிறாள் அவர் மனைவி. வேறு வழியின்றி அவரும் பிரீஃப் கேஸை நடுக் கூடத்தில் போட்டு விட்டு க்யூவில் இடம் பிடிக்க ஓடி வருகிறார். இதற்குள் வீதியே அல்லோல கல்லோலப் பட்டுப் போகிறது.

அதிகாலையிலிருந்தே ஆவல், பரபரப்புடன் காத்திருந்த அத்தனை பேரும் அவரவர் வேலையை அப்படி அப்படியே போட்டுவிட்டுக் குடமோ குண்டானோ பக்கெட்டோ பாத்திரமோ எடுத்துக் கொண்டு வாசலுக்கு ஓடி வருகிறார்கள். எல்லா வீடுகளிலும் நண்டு சிண்டுகள் பரீட்சை நேரமானபோதிலும் அதிகாலையிலிருந்தே பாடம் படிக்காமல் வாசலில் விளையாட அனுமதிக்கப்படுகின்றனர். ''பாம், ப பாம்!'' என்று பல்ப் ஹாரன் ஒலி கேட்டதும் ''தண்ணி வண்டி'' என்று குரல் கொடுக்க வேண்டியது இவர்கள் கடமை.

வருகிற தண்ணீர் வண்டி வீதியில் இன்று எங்கே நிற்கும் என்று யாருக்கும் தெரியாது. தெருவில் உள்ள எல்லோருக்கும் நியாயம் செய்ய வேண்டும் என்ற நோக்கில் டிரைவர் ஒவ்வொரு நாளும் ஓரிடத்தில் நிறுத்துகிறார். எனவே, ஏஷியாடைத் தோற்கடிக்கிற ஒரு ஓட்டப் பந்தயம் நடக்கிறது. டி.வி.யில் இடம் பெறாத ஒரே ஒரு குறைதான். லாரி சுமந்து வரும் டாங்கிலிருந்து வெளிவரும் குழாய்களை யார் யார் முதலில் பிடித்துக் கொள்கிறார்களோ அவர்களே வென்றவர்கள்.

ஒரு நாள் லாரி வரு முன்னரே க்யூவில் நிற்பது என்று தீர்மானித்தோம். ஆனால் அன்று லாரி க்யூவின் வால் பக்கம் போய் நிற்க, அத்தனை பேரும் ஒரு 'அபௌட்டர்ன்' அடித்தபோது கடைசியில் க்யூவில் சேர்ந்தவர்கள் முதலில் தண்ணீர் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள்! இதற்குப் பிறகு லாரி வரு முன்பே க்யூ அமைக்கும் முயற்சி கைவிடப்பட்டது. லாரி பின்னாலேயே ஓடி முதலில் குழாயைப் பிடித்துக் கொள்கிறவர் அதை விடாத வரையில்—பின்னால் நிற்பவர்களின் சாபச் சுமைகளைச் சமாளிக்கும் சாமர்த்தியம் உள்ளவரை எத்தனை பக்கெட் தண்ணீர் வேணுமானாலும் பிடித்துக் கொள்ளலாம். அவர் வீட்டிலிருந்து லாரி வரை குடும்ப அங்கத்தினர்கள் அத்தனை பேரும் பக்கெட், குடம், குண்டான்களுடன் ரிலே ரேஸ் நடத்துவார்கள்.

வசதி படைத்த அதிர்ஷ்டராஜ் கெட்டிக்காரத்தனமாக ஹோஸ் பைப் வாங்கி வந்து ஒரு முனை வீட்டினுள்ளேயே இருக்க இன்னொரு முனையை இழுத்து வந்து லாரிக் குழாயில் பொருத்தி விட்டார். அன்று முழுவதும் அவர் பெயர் எங்கள் தெருவாசிகள் வாயில் அகப்பட்டுக் கொண்டு பட்ட பாடு! அவர் பெயரின் ஒவ்வொரு எழுத்தையும் கடித்துக் கூழாக்கினார்கள்!

விரோதங்கள் சில வளர்ந்தாலும் நட்பு உருவாகாமலும் போகவில்லை. பக்கத்து வீட்டுப் பங்கஜமும் மூன்றாவது வீட்டு மாமியும் சில காலமாகவே முகாலோபனம் செய்வதில்லை. ஆனால் தண்ணீர் க்யூவில் இடம் பிடிக்க இருவரும் கடைசியாக வந்து அருகருகே நின்று ஒரு சொட்டுத் தண்ணீர் கிடைக்காமல் திரும்பியபோது இருவர் மனங்களிலும் பந்த பாசமும் ஒற்றுமை உணர்வும் மழைக்கால புழலேரி போல் நிரம்பித் ததும்பியது!

கோடி வீட்டு அருணாசலம் இரண்டு பிளாஸ்டிக் குடங்களை வாங்கி வந்தபோது அவர் மனைவி இடித்துக் காட்டியது ஆறாம் நம்பர் வீட்டு ரிலே ஸ்டேஷன் மூலம் எங்கள் வீட்டுக்கும் எட்டியது. ''இந்த பிளாஸ்டிக் குடத்தைத் தூக்கிக்கிட்டுக் க்யூவில் நிற்கவே எனக்கு வெட்கமா இருக்கு. எல்லாரும் வெண்கலத்திலும் எவர்சில்வரிலும் பளபளக்கிற குடங்களைக் கொண்டுட்டு வராங்க'' என்றாளாம். ''கிடைக்கிற அரைக் குடம் தண்ணியைத் தங்கக் குடத்தில் கூட கொண்டு வந்து இரும்புப் பீரோலே வைச்சுப் பூட்டலாம். ஆனா துட்டுக்கு எங்க போறது'' என்றாராம் அருணாசலம். மேலும் ''கூட்டத்தில் இடிபட்டு நசுங்க எவர்சில்வர் எதுக்கு? பிளாஸ்டிக்கே போதும்'' என்று சமாதானம் கூறினாராம். இதைத் தொடர்ந்து கணவன் மனைவியிடையே நடந்த வாக்கு வாதங்கள், நடுநிலை நாடுகளின் நடுநிலையற்ற விவாதங்கள் தோற்குமளவுக்குக் காரசாரமாய் நீண்டன.

பத்து நாட்கள் அமர்க்களப்பட்ட காலை நேரங்கள் பதினோராம் நாள் சோக அமைதியில் ஆழ்ந்தது. விசாரித்ததும் தெரிந்தது: கலெக்ஷன் படுத்து விட்டதாம்! வீட்டுக்கு வீடு வாரம் ரெண்டு ரூபாய் என்று பேசப்பட்டதை மாதம் இரண்டு ரூபாய் என்று எண்ணி விட்டார்களாம்! அந்த லாரி ஓட்டி கோபித்துக் கொண்டு போய் விட்டார். இப்போது வேறு ஒரு மெட்ரோ வாட்டர் லாரிக்காரரை வளைத்துப் போட முயற்சி நடக்கிறது. யாரை அணுகினாலும் வீட்டுக்கு மூன்று ரூபாய் வாராவாரம் எதிர்பார்ப்பதாய்க் கூறுகிறார்களாம். எங்கள் தெரு தண்ணீர் கிளப் இன்று மாலை கூடி விவாதிக்கப் போகிறது.

அதற்கு முன்னால் இதென்ன... மெட்ரோ வாட்டர் வாரியத்திலிருந்து எல்லா வீடுகளுக்கும் ஏதோ பில் வந்திருக்கிறதே! அட ஆண்டவனே! கடந்த நாலு மாதங்களாக தண்ணீரே சப்ளைசெய்யாத சாதனைக்கு மாதம் 20 ரூபாய் வீதம் 80 ரூபாயும் இல்லாத மீட்டருக்கு வாடகை 2 ரூபாயும் பழைய பாக்கி 82 ரூபாயும் ஆக மொத்தம் 164 ரூபாய் கட்ட வேண்டுமாமே!

- ''சென்னைவாசி''


நம்ம காதலுக்கு உயிர் கொடுக்க நினைச்சியே!.. ஒரு குடம் தண்ணி கொடு, போதும்!
தண்ணி புடிக்க போற அதுக்கு எதுக்கு பின்னாடியே வர்றே?
நீங்க போங்க!
தண்ணி கஷ்டம் பத்தி சொன்னேன்-ன்னா படத்தோட பத்திரிகையிலே போடு!
அந்த சாமியார் கை நீட்டுனா தண்ணி அருவியா கொட்டுது!..
புடிச்சும்!
இந்த லைப் நேசமா தண்ணி எடுத்துக்கறேன்! என்ன கொடுக்கணும்?
வாட்டர் டாங்கில் சேர்க்கிறது!
பெருநகர் குடிநீர் வாரியம்
எனக்கு தண்ணி பஞ்சம் கிடையாது!
தண்ணி லாரிக்கு எந்தப் பக்கம் போகணும்?

## அத்தியாயம் 9

நிர்மலமான ஆகாச வெளியில் சர்வ நிதானமாக இரண்டு பருந்துகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. கோவிலுக்கு நேர் எதிராக விரிந்த விஸ்தாரமான சாலையில் வாகனங்கள் அதிக பரபரப்பில்லாமல் நகர்ந்தன. சூரியன் இறங்கி விட்டதால் ஏற்பட்ட இளக்கத்தில் பாதசாரிகளின் நடையில் ஒரு நிதானம் தெரிந்தது.

உலகமே ஸ்தம்பித்து விட்டதோ என்று கார்த்திக்குக்குப் பிரமை ஏற்பட்டது.

காரின் ஸ்டியரிங் வீலைப் பிடித்தபடி உட்கார்ந்திருந்த தாராவின் முகம் அவனைப் புன்னகையுடன் பார்த்தது.

''உன்னைப் பார்க்கணும்னு நான் வந்திருக்கக்கூடாதா?''

அவள் என்ன சொல்கிறாள் என்று ஒரு விநாடி அவனுக்குப் புரியக்கூட இல்லை. மௌனமான ஒரு ஜடத் தனத்தோடு அந்தப் பளபளக்கும் சிவந்த கன்னங்களை, சாகரக் கண்களுக்கு மேல் விசிறியாக வளைந்திருந்த இமைப்பைகளைப் பார்த்தான். தோள்பட்டை வரை அலை அலையாய்த் தலைமயிர் ஓர் அலட்சியத்துடன் சரிந்திருந்தது. கார்ட்ராய் ஜீன்ஸின்மேல் கையில்லாத 'டாப்'ஸும் அதன் கழுத்தில் இறங்கலில் லேசாகத் தென்பட்ட வளைவுகளும் அவனது மெல்லிய உணர்வுகளைத் தூண்டிச் சுபாவக் கூச்சத்தை அதிகப்படுத்தின.

அவளுடைய கேள்வி மறுபடி ஞாபகத்துக்கு வர, அவன் குழப்பத்துடன் அவளைப் பார்த்தான்.

இவளா?

இவள் எதற்கு அவனைப் பார்க்க வர வேண்டும்?

சிரிக்கும் சிவந்த உதடுகளுக்கிடையே வரிசைப் பற்கள் பளபளத்தன.

பரிகாசம் செய்கிறாளோ?

அவனுக்குள் சுரீரென்ற அவமான உணர்வும் லேசான எரிச்சலும் ஏற்பட்டது. இவளுடைய விளையாட்டுக்கும் பொறுப்பற்ற பொழுது போக்குக்கும் நம்மை இலக்காக்குகிறாள் என்று கோபம் வந்தது.

தன் எண்ணங்களை மறைத்தபடி அவன் மெதுவாகக் கேட்டான்.

''என்னை எதுக்குப் பார்க்க வரணும்? உன் சப்ஜெக்ட் கூட நான் எடுத்துக்கல்லியே?''

அவள் வாய் விட்டுச் சிரித்தாள்.



''உனக்குப் படிப்பைத் தவிர வேற எந்த யோசனையும் இருக்காதா? நான் உன்னைப் பார்க்க ஆசைப்பட்டு வரேன்னு நீ நம்ப மாட்டியா?''

குபீரென்று காது நுனி சிவந்தது. அவன் அவசரமாகத் தெருவின் இருபுறத்தையும் பார்த்தான். அப்பாவைத் தெரிந்த யாராவது இவளது சிரிப்பையும் பேச்சையும் கேட்க நேர்ந்தால் எப்படி இருக்கும்?

அவள் இன்னும் சிரித்துக் கொண்டிருந்தாள், சவால் விடுகிற மாதிரி.

''ஐ லைக் யூ 'யார்.' என்னு நீ மத்த பசங்கள் மாதிரி இல்லே!''

பகபகவென்று அடிவயிற்றிலிருந்து இளம்பிய உஷ்ணத்தில் மார்பு வேகமாக அடித்துக் கொண்டது.

அந்த மெத்தென்ற உடம்பும், நளினமான சிரிப்பும், சொகுசான அலங்காரமும்...

ஷி மஸ்ட் பீ க்ரேஸி!

வார்த்தைகளுக்கு இருக்கும் சக்தியைப் பற்றி இவளுக்குத் தெரியுமா? என்னுடைய உணர்ச்சிகளுடன் விளையாடும் அளவுக்கு இவளுள் இருப்பது திமிர்த்தனமாக இருக்க வேண்டும்... பித்தலாட்டமாக....

விஜய் சரியாகச் சொன்னான்.

''அவளுடைய சகவாசமே வேண்டாம். எச்சரிக்கை செய்கிறேன்...!''

இவள் நம்மைச் சீண்டுகிறாள். அந்தப் பொல்லாத கண்களுக்குள் இருக்கும் குறும்புக்கு வேறொன்றும் அர்த்தம் இருக்க முடியாது.

அவன் மென்மையா நகை புரிந்தான்.

''தாங்க்யூ! உன்னுடைய பரீட்சைக்கு இன்னும் எத்தனை நாள் இருக்கு?''

''பத்து நாள்.''

அவன் தீவிர முகபாவத்துடன் தலையை அசைத்தான்.

''இன்னும் பத்தே நாள்! படிப்பிலே கவனம் செலுத்து! குருக்கள் பிள்ளையைத் தேடிண்டு போக ஆரம்பிச்சியானா ஆபத்து!''

அவன் சட்டென்று திரும்பி வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அவளுடைய பரிகாசச் சிரிப்பு மெலிதாகப் பின்னாலிருந்து கேட்டது.

அவன் திரும்பிப் பார்க்காமல் ஆத்திரத்துடன் நடந்தான். அவள் சொன்ன வார்த்தைகளில் ஏதேனும் உண்மை இருக்கக்கூடுமோ? என்று சில விநாடிகள் தயங்கி நின்ற சம்சயத்தை அவன் அவசரமாக ஒதுக்கினான். அந்தச் சமயம் ஏற்படுத்திய ஜிலுஜிலுப்பி



# ஒரு சங்கமத்தைத் தேடி

வாஸந்தி

விருந்து பலவந்தமாகத் தன்னை விடுவித்துக் கொண்டான். அவள் வார்த்தையை உண்மை என்று நம்பினால் தன்னை விடப் பைத்தியக்காரன் யாரும் இருக்க முடியாது என்று தன் செவிகளுக்குப் படும்படியாக வாய் விட்டுச் சொல்லிக் கொண்டான்.

வீட்டை ஒட்டிய வெளித் தாழ்வாரத்தில் அம்மாவும் அத்தையும் உட்கார்ந்து 'பாலக்' (ஒரு வகைக் கீரை) ஆய்ந்து நறுக்கிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் சற்று முன்வரை பனிப் படலமாய் மனசைக் கப்பியிருந்த கொஞ்ச நஞ்ச பிரமையும் சரேலென்று விலகி அவனை யதார்த்தத்திற்கு இழுத்தது. பழைய கோடம்பாக்கம் ஒன்பது கஜப் புடவையும் அதற்குப் பொருந்தாத ஏதோ ஒரு ரவிக்கையும், வீட்டு வேலையைத் தவிர வேறெதுவும் செய்திராத, செய்யத் தெரியாத உலர்ந்து போன உடம்புமாய்.. அம்மா அவனை நிமிர்ந்து பார்த்துப் பிறகு தன் வேலையைத் தொடர்ந்தாள்.

''இப்பக் காலேஜில்லே, படிப்பெல்லாம் முடிஞ்சு போச்சுன்னு பேரு. ஆனா வீட்டிலேயே தங்கறதில்லே பார்த்தியோ!''

என்று மெல்லிய குரலில் சொல்வது அவன் காலைக் கழுவிக் கொள்கையில் காதில் பட்டது.

''அவனும்தான் என்ன பண்ணுவான் மன்னி! இத்தனை நாளும் இராப் பகலாப் படிச்சாச்சு. கொஞ்சம் நாள் ஃப்ரீயா இருக்கட்டுமே! இனிமே உத்தியோகம்னு போய் விட்டான்னா அப்புறம் நேரம் எங்கே கிடைக்கும்?''

இந்த வீட்டில் அத்தை ஒருத்தி இல்லாவிட்டால் தன்னுடைய நிலைமை எப்படி இருந்திருக்கும் என்று நினைத்து அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''காப்பி வேணுமா?''

முகத்தை டவலால் அழுத்தித் துடைத்துக் கொண்டிருந்த அவன் திடுக்கிட்டுத் துண்டை நகர்த்திப் பார்த்தான்.

கமலா நின்று கொண்டிருந்தாள் சமையலறை நிலைப்படியில். துர்க்கை அம்மன் சிலைக்குக் கட்டும் கொசுவம் மாதிரி புடவைக் கொசுவம் முன் இடுப்பு வரை படர்ந்திருந்தது. அழுக்குத் தெரிந்தது. கமலாவின் மைவிட்ட பெரிய விழிகளில் சிநேகிதம் செய்து கொள்ள விழையும் ஆர்வம் பளிச்சிட்டது. அவன் தலையைக் குனிந்தபடி ''உம்'' என்றான்.

திடீரென்று அவனுக்கு ஓர் அசதி ஏற்பட்டது. நேரமே மிகப் பாரமாகிப் போனாற் போல் தோன்றிற்று. பரீட்சை முடிவு வெளியாகிற வரை என்னதான் செய்வது?

கமலா கொடுத்த காப்பியைக் கையில் வாங்கிக் கொண்டு அவன் தாழ்வாரத்திற்கு வந்து அத்தையின் எதிரில் உட்கார்ந்து கொண்டான்.

''அத்தை உங்க கிராமத்துக்குப் போயிட்டு வரலாமா?''

அத்தை ஆச்சரியப் புன்னகையுடன் நிமிர்ந்தாள்.

''என்ன திடீர்னு! நானே இரும்பி வந்து மூணு மாசம் கூட முழுசா ஆகல்லே!''

''சும்மா போகலாம் வாங்கோ. எனக்கு இங்கே போர் அடிக்கிறது. ரிஸல்ட் வரதுக்கு இன்னும் இருபது இருபத்தி அஞ்சு நாளாகும் போலிருக்கு!''

''என்ன மன்னி? இவன் என்னமோ சொல்றானே?''

''எனக்குத் தெரியாது. உங்கண்ணாவைக் கேளு. அவர் சரின்னா போங்களேன்!''

அப்பா அதிசயமாகச் சரி என்று விட்டார். கோவிலுக்கு வரும் ஓர் உயர் ரயில்வே அதிகாரி பக்தர் மூலம் டிக்கெட் வாங்கிக் கொடுத்து விட்டார்.

ரயிலில் ஏறி அமர்ந்தவுடன் ''நினைச்சதைச் சாதிக்கிற ராசிடா உனக்கு!'' என்று அத்தை சிரித்தாள். ''அது என்ன திடீர்னு கிராமத்து மேலே ஆசை வந்தது உனக்கு? பரீட்சைக்குப் படிச்ச அலுப்பா, இல்லே எதிலேருந்தாவது ஓடப் பார்க்கிறியா?''

அவன் லேசாகத் திடுக்கிட்டான். அத்தையின் பார்வையிலிருந்து எதையாவது மறைப்பது சாத்தியமா என்று திகைப்பேற்பட்டது. தன்னைச் சமாளித்துக் கொண்டு அவன் சிரித்தான்.

''ஓடணும்னு உங்களையும் அழைச்சுக் கொண்டு ஓடமாட்டேன். பரீட்சை முடிஞ்சப்புறம் என்ன செய்யறதுன்னே புரியல்லே. எத்தனை தடவை லைப்ரரிக்குப் போய்ப் படிக்கிறது? வீட்டிலே இருக்கலாம்னு...''

அவன் மேலே தொடராமல் சற்று நேரம் ரயிலின் ஓட்டத்துக்கு எதிராக நகரும் மரங்களையும் வயல் வெளிகளையும் பார்த்தான். கணேசனின் உல்லாசப் புன்னகையும் கமலாவின் மையிட்ட பெரிய விழிகளும் நினைவில் அசைந்தன.

''இரண்டு சங்கடங்கள்'' என்றான் அவன் மெள்ளச் சிரித்தபடி.

''கணேசனுக்குக் கல்யாணமானதிலிருந்து எனக்கு வீட்டிலே இடமில்லாமல் போச்சு. வீட்டிலே இருந்தாலும் அப்பா பிடிச்சுக் கரூர் கோவிலுக்கு வா, சந்தனம் அரைன்னு''

''அதென்ன இளப்பமான காரியமா?''

''இல்லே. கோவில்லே என்னை எல்லாரும் காட்சிப் பொருளா ஆக்கிவிடறா. குருக்கள் பிள்ளை, இன்ஜினியர் ஆகப்போறான் என்கிற லேபிள் எனக்கு அசிங்கமாப் படறது. எது என்னுடைய தப்புன்னு புரியல்லே. குருக்கள் பிள்ளையாய்ப் பிறந்ததா, இல்லே இன்ஜினியராகப் போகணும்னு ஆசைப்பட்டதா?''

''எதிலேயும் தப்பில்லே அசடே, தப்பெல்லாம் உன் மனசுக்குள்ளே! உன் நிழலைக் கண்டு நீயே பயப்படறே. வெட்கப்படறே! அதனாலே ஏற்படற பிரமைகள்தான் உன் சஞ்சலத்துக்கெல்லாம் காரணம்.''

அத்தை எத்தனை தோர்வையாகப் பேசுகிறாள் என்று ஆச்சரிய மேற்பட்டது. கூடவே தன்னை மிகவும் உன்னிப்பாகக் கவனிப்பவள் இவள்தான் என்கிற நெகிழ்ச்சி மனசை நிறைத்தது.

''அம்மா! இந்த வீட்டுக்கு விளக்கேற்ற ஒருத்தி வேணும்னியே! ஸ்விட்சுப் போட ஒருத்தியும், குத்துவிளக்கேற்ற ஒருத்தியும் அழைச்சுண்டு வந்துட்டேன்!''



அவன் தோளைக் குலுக்கிச் சிரித்தான்.

''நீங்க சொல்றது வாஸ்தவமா இருக்கலாம் அத்தை. நீங்க ஒரு விஷயம் புரிஞ்சுக்கணும். என் நிழலுக்கும் எனக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு. அதனாலேயே வாழ்க்கை எனக்குச் சரளமா அமையாதுன்னு தோணிண்டேயிருக்கு. இது பிரமையில்லே. அனுபவத்திலே கண்ட நிஜம். என்னையே நான் வெளிப்படுத்திக்க, என்னுடைய நிழல்லேந்து நா வித்தியாசமானவன்னு நிரூபிக்க ஒவ்வொரு கட்டத்திலேயும் நான் போராட வேண்டியிருக்கு. சில சமயம் இதிலேர்ந்தெல்லாம் தப்பிச்சுண்டு எங்கேயாவது ஓடிடலாம்னு தோணறது.'' அத்தை வெகுநேரம் எதுவும் பேசாமல் அவன் சொன்னதை அசைபோடுகிற மாதிரி உட்கார்ந்திருந்தாள்.

''நீ எங்கே போனாலும் உன் நிழலும் கூடத்தானே வரும்?'' என்றாள் மெள்ள.

''வரும்!'' என்றான் அவன். நழுவி ஓடும் வயல்களைப் பார்த்தபடி. ''ஆனா ஒவ்வொரு நிமிஷமும் குரூரமா ஞாபகப்படுத்திண்டிருக்காது.''

அத்தை அவனுடைய கையைப் பரிவுடன் வருடினாள்.

''நீ ரொம்பவும் சூட்சுமமா எல்லாத்தையும் பார்க்கறே கார்த்திக். கொஞ்சம் விட்டேத்தியா இருக்கக் கத்துக்கணும். இப்படி இருந்தியானா உனக்குத்தான் கஷ்டம். எந்தக் கட்டத்தையும் சமயத்துக்குத் தகுந்தமாதிரி சமாளிக்கலாம் என்கிற தைரியம் இருக்கணும். வாழ்க்கை ஓடற ஓட்டத்தோட ஓடிடாம சித்த எட்டக் கரையிலே நின்னு பார்க்கறாப் போல பார்க்கணும்.''

''கணேசன் மாதிரி! உங்களை மாதிரி! வித்தியாசமா இருந்தா வம்புஎன்கிற பயத்திலேயே கணேசன் இப்படி இருக்கானோன்னு எனக்குச் சில சமயம் தோணும்!''

விசாலம் சிரித்தாள்.

''உனக்குக் குதர்க்கமா எல்லாரையும் பார்க்கறதே வழக்கமாப் போச்சு. அவன் பிறவி ஞானி!''

கணேசனின் உல்லாசம் நிரம்பிய கண்களும், சந்தி பண்ணும்போது கோமதியின் கையைப் பிடித்ததும் நினைவுக்கு வர அவன் தனக்குள் முறுவலித்துக் கொண்டான்.

''நீங்க பிறவியிலேயே ஞானியா, இல்லே ஞானத்தை அப்புறம் வரவழைச்சுண்டேளா அத்தை?''

அத்தை மென்மையான புன்னகையுடன் ரயிலுக்கு வெளியே தெரிந்த காட்சிகளைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள் — முகத்தில் சாந்தமும் பார்வையில் காருண்யமுமாய், சத்தியமாய் இவள் ஒரு ஞானி என்று அவன் நினைத்துக் கொண்டான். அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அத்தை இப்படித்தான் இருக்கிறாள்....

''ஞானம் என்கிறது அத்தனை சுலபமா வந்துடக் கூடிய விஷயமாடா? விவேகத்தை வேணா அப்பியாசத்தாலே ஏற்படுத்திக்கலாம். எனக்கேற்பட்ட விவேகமெல்லாம் ஒரு கட்டாயத்தினாலே. எனக்கே வேற மாதிரி வாழ்க்கை அமைஞ்சிருந்ததானா என் பார்

# கோத்ரெஜ் ஸ்டோர்வெல்

## ஒரு விலை கூடிய அலமாரி சிக்கனமானதாக எவ்வாறு அமைகிறது!

நேர்த்தியான அமைப்பும், நீடித்த உழைப்பாற்றலும் பெற்று விளங்கிட, இப்போது கீறல் விழாத மேம்பட்ட மெருகு.

**நீடித்த உழைப்பாற்றல்:** கோத்ரெஜிடம் மட்டுமே உள்ள காற்றற்ற, தானே இயங்கும் மின்சார வண்ணப் பூச்சு முறை காரணமாக, ஸ்டோர்வெல் அனைத்தும் மேன்மையான மெருகுடன் துலங்குகிறது. அப்பழுக்கற்ற தரமான எஃகினால் தயாராவதால், துருப் பிடிக்காது என்ற உறுதியான நம்பிக்கை கிடைக்கிறது. ஸ்டோர்வெல் பல தலைமுறைகளுக்கு நீடித்து உழைக்கிறது.

**அதிகப்படியான பாதுகாப்பு:** கதவிலும் லாக்கரிலும் தகர்க்க முடியாத கோத்ரெஜ் பூட்டு. மறைவான கீல்கள். இறுக மூடிக் கொள்ளும் மும்முனைப் பூட்டுமுறை அமைப்பு. கோத்ரெஜ் மட்டுமே அளிக்கும் நூதன சிறப்பு.



**கிடைக்கும் இந்த நன்மைகளால்: நீடித்த உழைப்பாற்றல், அதிகப்படியான பாதுகாப்பு, தேர்ந்தெடுக்க கூடுதல் வாய்ப்பு.**

**தேர்ந்தெடுக்க கூடுதல் வாய்ப்பு:** சிதையாத, குறையற்ற ஆளுயரப் பிரதிபிம்பம் தெரிய முழு நீள (137 cm) வெளிகாட்டு 'ப்ளேட்' கண்ணாடி. அட்ஜஸ்ட் செய்யக் கூடிய ஷெல்ப்புகள் டை பார் துணி தொங்கவிடும் ராட், விருப்பத்திற்கேற்றபடி பல வகை இணைப்புகளுடன் கிடைக்கிறது. மூன்று வண்ணங்கள்— ஆலிவ் க்ரீன், ஸ்பெஷல் க்ரே, டீஏ (TA) க்ரே.

**எளிதில் கிடைக்கும் வசதி:** நாடெங்கிலும் உள்ள 400க்கும் அதிகமான விற்பனையாளர்கள் மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

**கோத்ரெஜ்** மேம்பட்ட தொழில் நுட்பம் மற்றும் மதிப்பு! **Godrej** ®

ULKA-GS-1-82R-TA

லையும் யோசனையும் வித்தியாசமா இருந்திருக்கலாமோ என்னமோ?''

அவன் பேசாமல் அவளையே பார்த்தபடி அமர்ந்திருந்தான். வார்த்தைகளையும் சம்பவங்களையும் அத்தை பின்னிக் கொண்டு போவதைக் கேட்க சுவாரஸ்யமாக இருந்தது. அத்தை இன்று பேசுகிற 'மூடி'ல் இருந்தாள்.

''பதிமூணு வயதிலே கல்யாணமாச்சு. பதினாறு வயசிலே புக்காத்துக்குப் போனேன். சொன்னா நீ நம்ப மாட்டே. அப்ப நான் ரொம்ப நன்னா இருப்பேன். அவருக்கு அதாவது உன் அத்திம்பேருக்கு என் சிவப்பைக் கண்டு, கருகருன்னு முழங்கால் வரை இடிக்கிற மயிரைக் கண்டு அசாத்தியப் பெருமை. ரொம்பப் பிரியம் காட்டினார் என்மேலே. 'பெண்டாட்டி காலைச் சுத்தறான்'னு எல்லாரும் பரிகாசம் கூடப் பண்ணுவா. ஊர் கண்ணே பட்ட மாதிரி இரண்டே வருஷத்திலே கதை முடிஞ்சு போச்சு....''

அத்தையின் பார்வை பல வருஷங்களுக்குப் பின்னால் ஓடியிருந்தது. குரலில் ஒரு லேசான சோகம் இழையோடிற்று. இதுவரை அத்தை தனது பழைய சரித்திரத்தையோ அந்தரங்கமான விஷயங்களையோ சொன்னதில்லை என்கிற திகைப்பில், இடையில் பேசுவது அநாகரீகம் என்கிற உணர்வில் அவன் பேசாமல் இருந்தான்.

''நன்னா இருந்தவருக்குத் திடீர்னு ஜுரம் அடிச்சது. கிராமத்து வைத்தியருக்கு அது டைஃபாய்ட் ஜுரம்னு தெரியல்லே. டவுன் ஆஸ்பத்திரிக்கு அழைச்சுண்டு போகணும்னு வீட்டிலே இருக்கிற பெரியவாள்ளாம் மீனமேஷம் பார்க்கறதுக்குள்ளே ஜன்னி கண்டு உயிர் போயிடுத்து.''

அத்தை அவனைச் சட்டென்று திரும்பிப் பார்த்து மென்மையாகப் புன்னகைத்தாள்.

''அப்ப எனக்கு என்ன வயசு தெரியுமோ? பதினாறு!''

அவன் அதிர்ந்துபோய் அவளைப் பார்த்தான்.

''பதினாறு? முப்பது வயசிலேன்னுனா நினைச்சேன்!''

''முப்பது வயசிலே அண்ணா ஆத்துக்கு வந்தேன். அதுவரை மாமியார் வீட்டிலே இருந்தேன். அதுவும் ஒரு விசித்திர காரணத்தாலே. உங்க அத்திம்பேர் சாகறதுக்கு இரண்டு நாள் முன்னாடி அவர் அம்மா கிட்ட சத்தியம் வாங்கிண்டார். அவர் செத்தப்பறம் என் மயிரை மழிக்கக் கூடாது, என்னை வீட்டுப் பெண் மாதிரி தன் வீட்டிலேயே வெச்சுக் காப்பாத்தணும்னு வாக்குக் கொடுக்கச் சொன்னார். அந்தச் சமயத்திலே எனக்கு இதெல்லாம் ஒண்ணும் புரியவேயில்லே. ஒண்ணே ஒண்ணுதான் புரிஞ்சுது. அவர் செத்துப் போன உடனே என் உடம்பிலேந்து ஒரு பாகம் கழண்டு போன மாதிரி உடம்பு துடிச்சுப் போயிடுத்து. என்னுடைய பிஞ்சு மனசிலே எப்படிப்பட்ட அதிர்ச்சி ஏற்பட்டிருக்கும்னு உன்னாலே புரிஞ்சுக்க முடியாது. உடம்பும் மனசும் ஆரோக்கியமா இருக்கிற நிலையிலே கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டாப்லே நான் நின்னேன். மனுஷியா இல்லே உபயோகமத்த பண்டமா — என்னை நான் இருந்த சமூகம் என்னை மனுஷியா அதுக்கப்புறம் ஏத்துக்காது... நீ என்னமோ ஒவ்வொண்ணுக்கும் போராட வேண்டியிருக்குன்னு அலுத்துக்கறியே? இத்தனைக்கும் எதிர்காலம் பூரா உன் எதிரே விரிஞ்சிருக்கு. எனக்கு எதுவுமே இல்லை. என் மனசைத்தவிர எனக்கு எதுக்கும் பாத்தியதை இல்லை. நானும் ஒரு மனுஷின்னு காண்பிக்கிறதுக்கு எத்தனை போராட வேண்டியிருந்தது தெரியுமா?''

சட்டென்று ஒரு பச்சாதாபம் அவனுள் பிரவகித்தது. அத்தையை இத்தனை நாளாக ரொம்ப மேலெழுந்த வாரியாத்தான் கவனித்திருக்கிறோம், என்று வெட்கமேற்பட்டது.

அத்தை எதிர்பாராமல் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

''எதுக்குச் சொல்ல வரேன்னா, போராட வேண்டியிருக்கேன்னு ஆத்திரப்படறதும் அதிலேருந்து ஓடினா என்னன்னு நினைக்கிறதும் எந்த வகையிலே உபயோகம்னு எனக்குப் புரியலே.''

தன்னுள் ஏற்பட்ட கூச்சத்தை மறைக்க அவன் சிரித்தான்.

''ரயிலைத் திருப்பச் சொல்றேளா? இல்லையானா . என்னோடு இன்னும் பத்து நாள் போராடறேளா?''

அத்தை நகைத்தாள்.

''போராடறேன்! நாதான் சொன்னேனே எதுக்கும் பயந்துண்டு ஓடமாட்டேன்னு!''

(தொடரும்)



சிறப்பான வட்டி விகிதம்!




உங்கள் முதலீட்டுத் தொகையில்
65% வட்டியாக திரும்பப் பெற்றிடுவீர்!
ஆச்சரியமாக இருக்கின்றதல்லவா!!

**லக்ஷ்மி கிருபா டெபாசிட் திட்டத்தில்**

மாதம் ரூ.100/-வீதம் 60 மாதங்கள் செலுத்தி அதன் பின்
24 மாதங்கள் கழித்து திரும்பப் பெற்றிடுங்கள் :—

# ரூ.9943

உங்கள் வசதிக்கும்,
தேவைக்கும் ஏற்ப
சந்தாவையும், கெடுவையும்
தேர்ந்தெடுக்க எங்கள்
கிளைக்கு இன்றே
விஜயம் செய்யுங்கள்



## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: கரூர்-639 001
நிர்வாக அலுவலகம்: சென்னை-600 086

என். முத்தியாலு,
சேர்மன்.

அன்னியச் செலாவணியில் வர்த்தகம் செய்ய அங்கீகாரம் பெற்ற வங்கி.

# நீயும் வேர்த்திருக்கிறாயா நண்பனே?

சுபா

அவன் கையை நீட்டி ஸ்விட்சைத் தட்டினான்.

'டகடகடகடக' என்று நூறு மனிதர்களின் வாயொலியை மகா சத்தமாய் ஏற்படுத்திக் கொண்டிருந்த மெஷின் சட்டென்று ஓய்ந்து போயிற்று.

நிமிர்ந்தான். மணியைப் பார்த்தான். நெற்றிப் புருவத்தில் சேர்ந்திருந்த வியர்வை முத்துக்கள் சட்டென்று வழித்தெடுத்தமாதிரி உருண்டு திரண்டு மூக்கின் பக்கச் சுவர் துவக்கத்தில் இறங்கிக் கண்ணின் ஓரத்தைத் தொட்டு விழிப் படலத்தில் பரவிற்று. கண் எரிச்சல் கண்டு தானாக இமை படபடவென்று அடித்துக் கொண்டது. மூன்றாக் கிரதையாகவோ என்னவோ அடுத்த இமைக் கதவும் தானாகவே பொருத்திக் கொண்டது. புறங்கையால் தேய்த்து விட்டுக் கொண்டான்.

''ஷண்முகம்... பத்து அஞ்சப்பா டயம், கௌம்பலே?''

கண்களைத் திறந்தான். ''கௌம்பிட்டேயிருக்கேன் கதிர்வேலு...''

''நாளைக்கு ஆஃப்தானே?'' என்றான் கதிர்வேலு.

''ஆமா....''

''சம்பளம் வாங்கிட்டியா?''

''சம்பளம் ஓடி ரெண்டையும் சேர்த்துச் சாயங்காலம்தான் வாங்கினேன். இன்னித் தேதிக்கு ஐயா எண்ணூறு ரூபாய்க்கு ராஜா... எவ்வளவு? எட்டு நூறு.!''

''இன்னிக்கு மஜா தான் னட்ல....''

''என்ன மஜா போ. லட்சுமி உடம்பு முடியலே உடம்பு முடியலேன்னு மொனங்கிகிட்டு இருந்துச்சுன்னு டாக்டராண்ட கூட்டிக்கிட்டுப் போனேன். உடம்புல ரத்தம் பத்தலேன்னு டானிக் எழுதிக் கொடுத்திட்டாரு. அப்புறம் ரெண்டு மூணு தினுசு மாத்திரை வேற. காலேயில கௌம்பறப்பக் கூட பாயில கம்பளிப் பூச்சி மாதிரி சுருட்டிக்கிட்டுக் கெடந்துச்சு.... பசங்க ரெண்டும் சாப்பிட்டதுங்களோ இல்லியோ தெரியலே.'' என்று அலுத்துக் கொண்டே காக்கிச் சட்டையைக் கழற்றி மடித்தான். வியர்வை உலர்ந்த பகுதிகள் உப்புத் திட்டுக்களாய் அங்கங்கே வெளுத்திருந்தன.

வேறு சட்டையைப் போட்டுக் கொண்டான்.

''போவோமா?''

''ம்...''

பையைக் கதிர்வேலுவிடம் கொடுத்துவிட்டு, குழாயைத் திறந்து கைகளைக் கழுவிக் கொண்டான். லேசாய் க்ரீஸ் பிசுபிசுப்பு இருப்பதாய் உணர்ந்து இன்னொரு முறை கண்ணும்பு சோப்பைப் போட்டுத் தேய்த்துக் கழுவினான்.

கேட்டுக்கு வருகையில் செக்யூரிட்டி தொட்டுப் பார்க்க, இவன் பேசிக் கொண்டே கையை மேலே தூக்கித் தளர்வாய் வைத்துக் கொண்டான்.

''ஹோட்டலுக்கு வேற போவணும்... ஹோட்டல்லேர்ந்து வாங்கியாறேன்னு காலேல கௌம்பரப்பவே சொல்லிட்டேன். டபிள் ஷிஃப்ட் முடியறதுக்கு இந்நேரம் ஆயிடுது. நேரம் கெட்ட நேரத்தில வீட்டுக்குப் போக வேண்டியிருக்குது... ம்... தலையெழுத்து....''

''மருந்து வாங்கணும்னியே...''

''காலேல பார்த்துக்கலாம்... இப்ப ஏது மருந்துக்கடை?''

''நம்ம சாரதா ஃபார்மஸிதான் இருக்குதே. நம்மளுக்கு மேல தொழில்காரன்: டுவெண்டி ஃபோர் அவர் ஸர்வீஸ் ஆச்சே அவுங்களது....''

''வாங்கிடலாங்கறியா?''

''மருந்து விஷயம்ப்பா... இதில டபாய்க்காதே....''

''சரி போலாம் வா....''

பாதையில் ஒன்றிரண்டு விளக்குகள் மட்டும் விழித்திருந்தன. நடந்தார்கள். மேலே நிலா பாதி உடல் தேய்ந்திருந்தது. துக்கத்தில் வெளிறிப் போயிருந்தது. சண்முகத்திற்குச் சோகை பிடித்த லட்சுமியைப் பார்க்கிற மாதிரி இருந்தது.

மருந்துக் கடையில் மாறுதலாய்ப் பையனுடன் சின்ன முதலாளியும் இருந்தார். பையன் ஒரு ஓரத்தில் உட்கார்ந்து கூட்டல் போட்டுக் கொண்டிருந்தான்.

ஷண்முகம் சட்டைப் பையிலிருந்து நான்காய் மடித்திருந்த, மடிப்பில் கிழிந்திருந்த பிரிஸ்கிருப்ஷனை நீட்டினான்.

''புருஷோத்தமா...'' என்றார் சின்ன முதலாளி. இருந்த இடத்தை விட்டு அசையாமல்.

''ஸார்....'' என்று அரக்கப் பரக்க ஓடி வந்தான் பையன்.

சீட்டை வாங்கிப் படித்து ஸ்டூல் மேல் ஏறி, உயரத் தட்டிலிருந்து மாத்திரைப் பட்டைகளையும், இரண்டாவது தட்டிலிருந்து டானிக் பாட்டிலையும் எடுத்து வைத்தான்' கணக்குப் போட்டு. ''இருபத்தி அஞ்சு ரூபா அறுபது காசு ப்ளஸ் ஸேல்ஸ் டாக்ஸ்' என்றான்.

''பில்லு போடாதப்பா''

''போட்டுத்தான் ஆவணுங்க...''

''அப்ப வரில்லாம் போடாதீங்க... சேல்ஸ் டாக்ஸ் நீங்கதானேப்பா கொடுக்கணும்... வாங்கறவங்க தலேல கட்டாதீங்களே...''

''அதெல்லாம் முடியாது ஸார்'' என்றார் சின்ன முதலாளி.

''வரி என்ன ஸார் ஒரு ரூபா முப்பத்தேழு காசுதான் ஆவுது. .. இருபத்து அஞ்சு

ரூபாய்க்கு மருந்து வாங்கறப்ப ஒரு ரூபாய் காசுக்குப் பாக்கறீங்களே...''

''ஒரு நயா பைசா சொல்லு... ஒழைச்சி சம்பாதிக்கிற துட்டு.. உக்காந்து சம்பாதிக்கிற துட்டு இல்லே.....''

''அப்ப நம்ம கடைல கெடைக்காது. வேற எடத்தில வாங்கிக்கிங்க...''

''டேய்....'' அவன் எழுப்பிய குரலில் சின்ன முதலாளி நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளி எழுந்தார்.

''ச்சு... என்ன ஷண்முகம்... இந்த நேரத்தில போய் வம்பை வாங்கிக்கிட்டு காசைத் தூக்கி எறிஞ்சிட்டு வா...'' என்று அவன் தோளில் அழுத்திச் சமாதானப் படுத்தினான் கதிர்வேலு.

சண்முகம் முகத்தில் கடு கடுப்புடன் பணத்தை எண்ணிக் கொடுத்தான்.

**ஹோ**ட்டலுக்குள் நுழைகையில் பத்தரை மணியாகியிருந்தது. ஹோட்டல் அந்த நேரத்திலும் சுறுசுறுப்பாய் இயங்கிக்கொண்டிருந்தது. நிறையப் பேர் இன்னும் காக்கிச் சட்டைகளைக் கழற்றாமலேயே நாற்காலிகளை நிறைத்திருந்தார்கள்.

''என்ன இருக்குது?''

''இட்டிலி, தோசை, போண்டா...'' என்று ஆரம்பித்து மூச்சு விடாமல் நீளமாய்ச் சொல்லி நிறுத்தினான்.

''ஒரு எட்டு இட்லி, எட்டு மசால் தோசை பார்சல் கட்டு. நல்ல கெட்டி சட்னியா வை.... எங்களுக்கு ரெண்டு காப்பி ஸ்ட்ராங்கா....''

இந்த நேரத்திலும் கூட இத்தனை நிறுசு 'அயிட்டங்கள்' இந்த ஹோட்டலில் வியாபாரமாகிற வித்தை சண்முகத்திற்குத் தெரிந்திருந்தது. ஃபாக்டரிக்குப் பக்கத்திலேயே ஓர் அமைப்பான இடம். இரண்டாவது ஷிப்ட் முடிந்து பத்து மணிக்கு மேல் வருபவர்களுக்குச் சௌகரியமாய், அந்த ஹோட்டல் பிரபலமாகி யிருந்தது.

காப்பி வந்தது. காப்பியை ஆற்றிக் கொண்டே பில்லைப் பார்த்தான். துணுக் கென்றது.

''இந்தாப்பா சப்ளையர்....'' என்று அதிகாரமாய்க் கூப்பிட்டான்.

''தோசை எவ்வளவு?''

''ஒன்னு அம்பதுங்க...''

''என்னிக்குப்பா ஏத்தினீங்க... மசால் தோசை ஒன்னு இருபதுதானே... முப்பது பைசா கூடப் போட்டிருக்கியே....''

''இது ஸ்பெஷல் மசாலாங்க.''

''ஒன்னை யாருய்யா ஸ்பெஷல் தோசை கட்டச்சொன்னது?''



''ஸ்பெஷல் மசாலா தான் இருக்குது...''

''அதை முதல்லேயே சொல்லி யிருக்கணும்... கூட்டம் ஜாஸ்தின்னு ஸ்பெஷல் தோசைதான் இருக்குதுன்னு சொல்லிடறதா... எனக்கு சாதா போட்டுக் கட்டு. ரெண்டு ரூபா நாப்பது பைசா நீயா குடுப்ப...?''

''சாதா இல்லியே.....''

''அப்ப இன்னும் பண்ணெண்டு இட்லியக் கட்டு.''

''தோசை கேட்டது வாபஸ் எடுக்க மாட்டாங்க....''

''ஒன் தப்பா என் தப்பா... நான் ஸ்பெஷல்னு கேட்டேன்....''

''முப்பது பைசாதானே கூட.... எல்லாரும் சாப்பிட்டுட்டுப் போறாங்களே...''

''ஒன் துட்டாயா? அடிக்கிறதே கொள்ளை விலே... இதில ஏமாந்தவன் தலேல ஸ்பெஷல் வேறயா... பில்லேக் குறைய்யா.''

குரல் ஓங்கிப் போயிருந்தது. நிறைய காக்கிச் சட்டைகள் திரும்பிப் பார்த்து ஆர்வம் காட்டியவுடன் முதலாளி சற்றுப் பதறிப்போனார். அவர்களிடம் உஷ்ணம் பிறந்தால் ஆபத்து என்று பயந்திருப்பார். எழுந்து வந்து சமாதானப் படுத்தினார். ஆறின காப்பியை ஒரே மூச்சில் குடித்து விட்டு, பில்லிலிருந்து 'ரெண்டு நாப்பதை'க் குறைத்துக் கொடுத்து விட்டு வெளியே வந்தான். கதிர்வேலுவும் மௌனமாய்ப் பின்தொடர்ந்தான்.

''லாஸ்ட் பஸ் போயிருக்கும். கம்பெனி பஸ்ல போகணும்னா இன்னும் அரை மணி நேரம் வெயிட் பண்ணணும். நடந்து கூட போயிடலாம். இன்னைக்கு கைகால்லாம் கொடைசலா இருக்குது... ரிக்ஷாலே போயிடறேன்....''

''செய்... நான் இப்படியே நடந்து போயிருவேன்... ரெண்டாவது தெருதானே?''

டாக்டர்: நோயாளி பிழைத்தது கடவுள் செயல் என்று அவரிடம் சொன்னது தப்பாப் போச்சு.
முரளி: ஏன்? என்ன ஆச்சு?
டாக்டர்: தேங்காய் உடைத்துக் கற்பூரம் காட்டி விட்டுப் போய் விட்டார். பீஸ் தரலே.

—லலிதா செல்லப்பா



கதிர்வேலு திரும்பிப் போனவுடன் இவன் ரிக்ஷா பிடித்து பேரம் பேசினான்.

''மூணுரூவா குடு சாமி...''

''என்னப்பா இவ்வளவு அநியாயமாக் கேக்கறே... நடந்தாலே கால் அவர்ல போயிடலாமே....''

''தூரம் சாமி.... ராத்திரி நேரம் வேற... ஒண்ணும் ஜாஸ்தியாக் கேக்கலே... ஒருவேளை சோறு சாமி....''

''சரி கௌம்பு.....'' என்றான்.

ரிக்ஷாக்காரன் மெத்தையைத் தூசு தட்டி வைத்தான். சண்முகம் ஏறி உட்கார்ந்தான்.

ரிக்ஷாக்காரனின் மீது கண்களைப் பதித்தான் சண்முகம். கால்களின் ஏற்ற இறக்கத்தில் ஆடு சதையின்பச்சை நரம்புகள் புடைத்துத் தெறித்து விடுகிற மாதிரி பயத்தை ஏற்படுத்தி விட்டு, மறுபடியும் சாதாரண நிலைக்கு வந்து, மறுபடியும் புடைத்துத் தெறிக்கிற மாதிரி... போட்டிருந்த கால் சராயில் பிரி பிரியாய் நூல் இழைகள் தொங்கிக் கொண்டிருந்தன. விளக்கின் பின்வாங்கலில் பளபளவென்று வைர முத்துக்கள் முதுகில் பரவலாய்ப் பதிந்திருக்க, முதுகுத் தண்டின் ஊடே, வியர்வை நூல் இழை விடாமல் இறங்கி ட்ரவுசருக்குள் சென்று நனைத்தது.

நாற்பது வயதிருக்கலாம். ஆனால் சத்தில்லாத எலும்பு உடம்பு. பெடல்களை ஏறி மிதிப்பதில் மேல் மூச்சு கீழ் மூச்சு திணறிற்று. பாலத்தின் ஏற்றத்தில் கிட்டத்தட்ட நுரை தள்ளிய மாடாய்ப் படாரென்று படுத்து விடுவான் போலத் தோன்றிற்று.

''லெப்ட்டா ரைட்டா சாமி...''

''லெப்ட்டுல போப்பா...'' என்றான் சண்முகம் அதற்கு மேல் அவனைப் பார்க்க முடியாமல்.

வீட்டு வாசல் தெரிந்தது. வாசலில் லட்சுமி காத்திருந்தது நிழலாய்த் தெரிந்தது.

''அந்தநாலாவதுஊட்டண்டைநிறுத்தப்பா''

'க்க்யீங்' என்று ரிக்ஷா அரைத்து நின்றது.

''என்னங்க இவ்ளோ லேட்டு'' என்றாள் லக்ஷ்மி.

''கொஞ்சம் லேட்டாயிடுச்சி...'' என்றான் சற்றுக் குற்றம் உணர்ந்த குரலில்.

பையில் கையை விட்டான். ஐந்து ரூபாய் நோட்டாய்த்தான் அகப்பட்டது.

ரிக்ஷாக்காரன் வியர்வை படாமல் நுனி விரல்களால் நோட்டைப் பற்றினான்.

''சில்லறை இல்லீங்களே...''

''எவ்வளவுப்பா...'' என்றாள் லக்ஷ்மி இடையில் புகுந்து.

''மூன்று ரூவாம்மா.''

''இரு கொண்டாரேன்...''

''வேணும் லட்சுமி... இரு... சில்லறை வேணும்ப்பா... மீதியை நீயே வச்சுக்க''

''என்னங்க இது அநியாயமா ரெண்டு ரூபாயைத் தூக்கி அவனுண்டை குடுக்கறீங்க?...'' என்று கடிந்து கொண்டே அவன் பின்னால் வீட்டிற்குள் நுழைந்தாள் லக்ஷ்மி.

''அவன் நம்ம ஜாதிக்காரண்டி...'' என்றான் சண்முகம் கொஞ்சம் கர்வமாய்.



கோயமுத்தூர் விளம்பர ஆலோசகர் ஸ்ரீ O. S. ராமஸ்வாமி மகள் சௌபாக்கியவதி ராதாவுக்கும் ஈரோடு இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகை ஏஜண்டு ஸ்ரீ C. S. நடராஜன் மகன் சிரஞ்சீவி மோகனுக்கும் பழனியில் திருமணமும் கோவையில் திருமண வரவேற்பும் நடந்தது.



ராமாபுரம் ஸ்ரீ V. சுப்ரமண்ய ஐயருடைய புதல்வி சௌபாக்யவதி லலிதா (Canara Bank, Royapettah) விற்கும் ஆலங்குடி ஸ்ரீ S. ராமனுதய்யர் குமாரன் சிரஞ்சீவி **R. ராதாகிருஷ்ணன்** (UCO Bank, Madras) அவர்களுக்கும் திருமணம் சமீபத்தில் சென்னையில் சிறப்பாக நடந்தேறியது. பெருந்திரளான நண்பர்களும் உறவினர்களும் வருகை தந்து புது மணத் தம்பதிகளை ஆசீர்வதித்தனர்.

வாழ்க மணமக்கள்

# குருபாதம் செய்த தப்பு!

ராஜேஷ்குமார்

அந்தச் சிறிய பள்ளிக்கூடத்தின் வாசல் திண்ணையில் கன்னங்களுக்குக் கைகளால் முட்டுக் கொடுத்தபடி வெறித்த பார்வையோடு உட்கார்ந்திருந்தார் தலைமை ஆசிரியர் குருபாதம்.

அது ஒரு 'ஒன் மேன் ஸ்கூல்'. அவரே ஆசிரியர், அவரே தலைமை ஆசிரியர், அவரே மதிய உணவு ஏற்பாட்டையும் செய்பவர். தென்னங் கீற்றுக்களால் போர்த்தப்பட்டிருந்த அந்த மண் சுவர் பள்ளியில் நூறு குழந்தைகள் வரைக்கும் படித்துக் கொண்டிருந்தார்கள்.

அன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை. பள்ளி விடுமுறை யென்றாலும் பிள்ளைகளுக்கு மதிய உணவு தயார் செய்ய வேண்டிய கட்டாயம்.

''ஹெட்மாஸ்டர் அய்யா!''

சமையல் செய்யும் பொன்னம்மாவின் குரல் கேட்டுச் சலனமில்லாமல் திரும்பினார் குருபாதம். என்ன என்பது போல் தலையை அசைத்தார். உயிரில்லாத பார்வை.

''உலையைஏத்தியாச்சு...அரிசிவேணுங்க!'' —பொன்னம்மா சொல்ல, மெல்ல தளர்வாய் எழுந்தார் குருபாதம். சமையலுக்கான சாமான்கள் இருந்த அறையில் — பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார்.

''அரிசி எவ்வளவு வேணும் பொன்னம்மா?'' சன்னமான குரல்.

''இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை. பத்துப் பதினஞ்சு குழந்தைங்க குறைச்சலாத்தான் வரும். நாலு கிலோ அரிசி குடுங்க போதும்.''

பொன்னம்மா சொல்லச் சொல்ல மூட்டையில் இருந்த அரிசியைத் தராசில் நிறுத்தி அளந்து கூடையில் கொட்டினார் குருபாதம். கொட்டிவிட்டுக் கீழ் பார்வை பார்த்துக் கொண்டு அப்படியே நின்றார். அசையாத நிலை.

பொன்னம்மாள் கனைக்கினாள். ''அப்புறம் எண்ணெய் வேணுங்களய்யா...!''

''ம்...ம்...'' கனமாய்ப் பெருமூச்சு விட்டார். ''எவ்வளவு?''

''ரெண்டு லிட்டர்.''

எண்ணெய் டின்களைச் சாய்த்துப் பாட்டில்களை நிரப்பினார் குருபாதம். சமையலுக்கு வேண்டிய பருப்பு, மிளகாய், கடுகு, காய்கறி ஒவ்வொன்றையும் பொன்னம்மா சொல்லிக் கொண்டே போக, எல்லாவற்றையும் அளந்து அளந்து பொன்னம்மாளிடம் கொடுத்தார்.

''அவ்வளவுதானுங்களய்யா!'' — சமையலுக்கான பொருட்களை எடுத்துக் கொண்டு சமையலறைக்குக்கிளம்பினாள் பொன்னம்மா.

ஸ்டோர் ரூமைப் பூட்டிக் கொண்டு— தொய்ந்த நடையோடு வராந்தாவுக்கு வந்தார் குருபாதம்.

மணி பன்னிரண்டு முப்பது.

''சமையல் முடிஞ்சாச்சு ஹெட்மாஸ்டரய்யா... புள்ளைங்கெல்லாம் வந்து வரிசையாக உட்கார்ந்திட்டிருக்காங்க. நீங்க வந்து ஒரு பார்வை பார்த்துட்டா பரிமாறிடலாம்''

நிலத்தில் கையை ஊன்றி மெதுவாய் எழுந்தார் குருபாதம். மேல் துண்டால் முகத்தை அழுத்த



மாய்த் துடைத்துக்கொண்டே உள் கூடத்துக்குப் போனார்.

குழந்தைகள் அலுமினியத் தட்டுக்களோடும், பசியில் மிதக்கும் கண்களோடும் காத்திருந்தார்கள். குருபாதத்தைக் கண்டதும் பழக்க தோஷத்தில் ஒரே கோரஸாய் 'நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்....' பாட ஆரம்பித்தார்கள்.

பாட்டு முடியும்வரை மௌனமாய் நின்றிருந்த குருபாதம் — பாட்டு முடிந்ததும் பொன்னம்மாவைப் பார்த்துக் கையசைத்தார். பொன்னம்மாள் பரிமாற ஆரம்பித்தாள்.

அதே விநாடி....

பள்ளிக்கூட வாசலில் அந்த ஜீப் வேகமாய் வந்து தரையைத் தேய்த்தபடி நின்றது. வெள்ளுடுப்புக்களில் நான்கு பேர் இறங்கினார்கள். கைகளில் சில பைல்கள்... தோற்றத்திலும், நடையிலும் ஒரு மிடுக்குத் தெரியப் பள்ளியில் நுழைந்தார்கள்.

குருபாதம் வெளியே வந்தார். உடனே புரிந்து கொண்டார். வந்திருப்பவர்கள் மதிய உணவு ஆய்வாளர்கள்.

''வாங்க ஸார்... வணக்கம்!'' — தளர்வாய்க் கைகளைக் குவித்தார். வந்ததும் நேரே சமையலறைக்குள் நுழைந்தார்கள். பாத்திரங்களில் நிரம்பியிருந்த புளியோதரையையும், புடலங்காய்க் கூட்டையும் வாயில் போட்டுப் பார்த்தார்கள். குருபாதத்தைப் பார்த்து ஒருவர் கேட்டார்.

''இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமையாச்சே... அரிசி குறைச்சுத்தானே போட்டிருக்கீங்க?''

''ஆமா!'' என்றார் குருபாதம்.

''எவ்வளவு போட்டீங்க?''

''நாலு கிலோ.''

''அரிசி இன்னும் எவ்வளவு இருப்பு இருக்கு?''

''பத்து கிலோ இருக்கு!''

''பரமேஸ்வரன்! நீங்க ஸ்டோர் ரூமுக்குப் போய் அரிசி பத்துக் கிலோ இருக்கான்னு அளந்து பார்த்துடுங்க... அப்படியே, எண்ணெய், பருப்பு எல்லாத்தையும்சரிபாருங்க... நேரமாச்சு! இன்னும் நாலைந்து சென்டர் போகணும்...'' — ஒரு வெள்ளுடுப்பு பக்கத்தில் நின்ற இன்னொரு வெள்ளுடுப்பிடம் சொல்ல — அவர் நகர்ந்தார்.

வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற பொன்னம்மாவை ''நீ பரிமாறம்மா...குழந்தைங்க காத்திட்டிருக்காங்கல்ல...!'' என்றார், இன்னொரு அதிகாரி.

குருபாதம் எதிர்பக்கச் சுவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்க ஒரு பத்து நிமிஷம் கழித்து ஸ்டோர் ரூமிலிருந்து வெளிப்பட்டார் சரிபார்க்கச் சென்றிருந்த அதிகாரி. முகம் மாறியிருக்க மற்றவர்களை நெருங்கினார். ''ஹெச். எம். தவறான இருப்பு குடுத்திருக்கார். அவர் சொன்னதைக் காட்டிலும் ஸ்டாக் ரெஜிஸ்டர்ல இருக்கிறதைக் காட்டிலும் இருப்பு அதிகமா இருக்கு.''

குருபாதம் தலையை உயர்த்தினார். அதிர்ச்சியோடு கேட்டார்.

''என்ன சொல்றீங்க... ஸ்டாக் அதிகமா இருக்கா?... அப்படி இருக்காதே?'' அந்த அதிகாரி புன்னகையோடு நெருங்கினார். ''மிஸ்டர் குருபாதம் இன்னிக்கு அரிசி எவ்வளவு எடுத்தீங்க?''

''நாலு கிலோ.''

''நேத்தைய அரிசியோட இருப்பு பதினாலு கிலோன்னு ஸ்டாக் ரெஜிஸ்டர்ல இருக்கு... இன்னிக்கு நாலு கிலோ எடுத்திருக்கீங்க. அப்படின்னா இன்னியோட ஸ்டாக் பத்து கிலோ இருக்கணும். ஆனா அரிசியை எடை போட்டுப் பார்த்ததில பதினொரு கிலோ இருக்கு.... அந்த அதிகப்படியான ஒரு கிலோ அரிசி எப்படி வந்தது?''

குருபாதம் வியர்த்தார்.

அதிகாரிகளின் கண்களில் சந்தேகப் பறவைகள் சிறகுகளை அசைக்க ஆரம்பித்தன. ஒவ்வொருவராய் வாயைத் திறந்தார்கள். குருபாதம் சோற்றுப் பாத்திரத்தைப் பார்த்தபடி நின்றார். குரல் லேசாய்க் கரகரத்தது.

''இன்னிக்குச் சமையலுக்கு உபயோகப்படுத்தின அரிசியைப் பார்த்தா நாலு கிலோ இருக்கும்னு எனக்குத் தோணலை... மூணு கிலோதான் இருக்கும்...''

''அப்புறம் ஏன் நாலு கிலோன்னு சொன்னீங்க?'' — ஒருவர் கோபமாய்க் கேட்க இன்னொருவர் ''அதிகப்படியா இருக்கிற அந்த ஒரு கிலோ அரிசியை உங்க வீட்டு உபயோகத்துக்கு எடுத்துக்கலாம்னு நினைச்சீங்களா?'' என்றார்.

''ஸார்....!'' — ஏறக் குறைய அலறினார் குருபாதம்.

''ஆரம்பத்திலே நாலு கிலோ அரிசி எடுத்ததாச் சொன்னீங்க. இப்போ நாங்க இருப்பைக் கண்டு பிடிச்சுக் கேட்டதும் சோத்துப் பாத்திரத்தைப் பார்த்துட்டு மூணு கிலோதான் இருக்கும்னு சொல்றீங்க... உங்க பேச்சு சரியில்லையே!''

''ஸார்....!'' — நாக் குழறியது குருபாதத்துக்கு.

''ஒரு டீச்சர் இருக்கீங்க. செய்யற வேலையில ஒழுக்கம் வேண்டாம்? குழந்தைங்களுக்குப் போடற சோத்துல கை வைக்கலாமா?''

விஜி: காதல் கடிதத்தில் பின் குறிப்புஎன்று போட்டு என்ன எழுதியிருக்கிறார் உன் காதலர்?

மாலா: நாளை அவரைச் சந்திக்கப் பீச்சுக்கு வரும்போது போனமாசம் வாங்கின பத்து ரூபாய்க் கடனை மறக்காமல் திருப்பிக் கொண்டுவரச் சொல்லி எழுதி யிருக்கிறார்.

—லலிதா செல்லப்பா



# தாவண்கெரே

**எடுப்பான கலப்பழகுடன் மிடுக்கான பாணி அமைக்கிறது.**




## தாவண்கெரே
## ஃபாஷன் துணிரகங்கள்

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ராதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ராதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

குருபாதம் அடிவயிற்றில் கத்திக் குத்து பட்டவர் போல் துடித்து நிமிர்ந்தார்.

''எக்ஸ்க்யூஸ் மீ... எனக்கிருந்த மனக் குழப்பத்துல தப்புநேர்ந்து போச்சு..இனிமே வராமப் பார்த்துக்கறேன்....''

''தப்பு வந்ததற்கு என்ன பதில் சொல்லப் போறீங்க?கடமையைச் செய்யறப்போ தப்பு வரக் கூடாது. தப்பு வந்தா, அதற்கான பதிலே நீங்க சொல்லத்தான் வேணும்... பரமேஸ்வரன்! அந்த மெமோ புக் எடுத்து எழுதுங்க!''

அவமானத்தால் — குருபாதம் குன்றிப் போன அதே விநாடி....

பள்ளி வாசலில் அந்த சைக்கிள் வந்து நின்றது. தலை முடி யெல்லாம் கலைந்து முகம் வியர்த்த ஓர் இளைஞன் சைக்கிளி லின்றும் இறங்கி உள்ளே வந்தான்.

''அப்பா....!''

குருபாதம் தலையை நிமிர்த்தினார்.

''என்ன முரளி!?''

முரளியின் குரல் தழுதழுத்தது. ''அம்மாவோட கடைசிப் புறப்பாட்டுக்கு எல்லா ஏற்பாடுகளும் பண்ணியாச்சு. நீங்க செய்ய வேண்டிய சடங்கு ஏதோ ஒண்ணு இருக்காம். கூட்டிட்டு வரச் சொன்னாங்க... புறப்படுங்க அப்பா....''

குருபாதம் திடீரென்று பொங்கி அழுதார். அதிகாரிகளைப் பார்த்தபடி மெலிதாக விம்மிக் கொண்டே பேச ஆரம்பித்தார். ''ஸார்... வீட்டுக்குப் போய் என்னோட மனைவியோட காரியங்களை முடிச்சுட்டு வந்து உங்க மெமோவை வாங்கிக்கறேன்.! உதவிக்கு யாரும் இல்லாத இந்தப் பள்ளிக்கூடத்தில நான் இருந்துதான் மதிய உணவைப் போட்டாகணும்... எம் மனைவியோட கடைசிப் புறப்பாட்டுக்கான ஏற்பாடுகளை என் மகனை விட்டே செய்யச் சொல்லிட்டுப் பள்ளிக் கூடத்துக்கு வந்தேன். இருபத்து அஞ்சு வருஷமா எனக்கு மனைவியா இருந்தவ போயிட்டாளேங்கிற வருத்தத்தில... அதனால ஏற்பட்ட மனக் குழப்பத்தில அரிசியை அளந்து போடறதுல தப்புப் பண்ணிட்டேன். இருந்தாலும் உங்க மெமோவைக் குடுத்துட்டுப் போங்க...!'' — சொல்லிவிட்டுக் குருபாதம் ஒரு குழந்தையாய் அழ...

அதிகாரிகள் ஸ்தம்பித்துப் போக ஆரம்பித்தார்கள்.

---



அருள்வாக்கு

பழ மரத்தில் மனுஷ்யனுக்கு ருசியான பழம் கிடைக்கிறது. இது ஒரு பர்பஸ். இதற்குள் திரிசமமாய் இன்னொரு பர்பஸ். இதே மாதிரி பழம் பின் சந்ததிக்கும் கிடைக்க வேண்டும் என்ற ஸ்வய ஸம்பந்த லாபத்துக்காகப் பழத்துக்குள் இருக்கிற கொட்டையை நடுகிறோம். இதிலேயே அந்த மரம் தன் ஸந்ததியை விருத்தி பண்ணிக்கொள்கிற அதன் ஸ்வய லாபமான பெரிய பர்பஸும் நிறைவேறுகிறது.

இப்படி ஆலோசித்துப் பார்த்ததில் என்ன தெரிகிறது? ''ஜட வஸ்து தானாக ஒழுங்கை(Order)நோக்கத்தை(Purpose) ஏற்படுத்திக் கொள்ள முடியாது. அதனால் மரத்தை மண்ணயாகப் பண்ண ஒரு தச்சன் இருக்க வேண்டும் என்ற நம்முடைய Premiseன் (அடிப்படைக் கொள்கை) படியே அந்த மரத்தைப் பண்ணவும் ஒரு மகா பெரிய தச்சன் இருந்தாக வேண்டும் என்று தெரிகிறது. நாம் பண்ணுவதை விட இன்னும் பெரிய ஆர்டரோடு இன்னும் பெரிய பர்பஸ்களுக்காக இந்த மரம் இருக்கிறதால் நம்மைவிட மகா கெட்டிக்காரனான தச்சன் அவன் என்றும் தெரிகிறது. நாம் செய்கிறதை யெல்லாம் அப்பட்டமாகக் காட்டி டெமான்ஸ்ட்ரேட் பண்ணுகிறோமென்றால் நம்மை விட பரமாத்புதங்களைப் பண்ணும் அவனோ இத்தனையையும் பரம இரகசியமாகப் பண்ணித் தன்னுடைய ஸூக்ஷ்மமான ரஸானுபவத்தைக் காட்டுவதோடு தன்னையே ஒளித்துக்கொண்டு நம்முடைய கெட்டிக்காரத் தனத்தை யெல்லாம் அசட்டுத்தனமாக்கி விடுகிறான்.

மனுஷ்யன் தின்னாத வேப்பம்பழம் என்றால் அதைத் தின்ன ஒரு காக்கா ஜாதியை அதோடு பிணைக்கிறான். அந்தக் காக்கா மனுஷ்யனைப் போலக்கொட்டையை நட்டு அந்த விருக்ஷத்தின் இன விருத்தியைச் செய்யாது என்பதால் அது எச்சமிட்டே கொட்டை வேறே இடத்தில் (இந்த மரத்தின் நிழலில் வாடாமலிருப்பதற்காகவே வேறே இடத்தில்) முளைக்கும்படி பண்ணுகிறான்.

நாம் வெளியே விடுகிற கார்பன்டை ஆக்ஸைடை மரம் உள்ளே இழுத்துக் கொள்வது, அது பதிலுக்குத் தருகிற தித்திப்புப் பழத்தை நாம் சாப்பிடுவது, அதையே நாம் மறுபடி எருவாகமாற்றி அதற்குத் தருவது என்று இப்படிப் பல இனங்களை — ஜீவ ஜடங்களை ஒன்றுக்கொன்று உபயோகமாகக் கோத்து வைத்திருக்கிறான்.

— ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

# துடிக்கும் கரங்கள்

எஸ்டேட் முதலாளியின் கொடுமைகளைத் திரையில் சற்று வித்தியாசமாகச் சொல்ல நினைத்த ஸ்ரீதருக்கு அவ்வப்போது விநியோகஸ்தர்களின் நினைவு குறுக்கே நின்று அவருடைய புதுமை செய்யத் துடிக்கும் கரங்களைக் கட்டிப் போட்டிருப்பது பரவலாகத் தெரிகிறது.

தப்பித் தவறி ஒரு காட்சி. மாடி உப்பரிகையில் நின்று கொண்டு காசுகளை அள்ளி வீசி, ஜனங்களைப் பொறுக்க வைத்து ஒரு சிறுவனை நெரிசலில் சிக்கி உயிர் துறக்க வைத்திருப்பது. அதைக் கண்டு ரஜினி கொதித்து எழுந்தாலும் முதலாளியின் தாராள மனத்தையும் சேர்த்தல்லவா அக்காட்சியில் சொல்லியுள்ளார்!

தொழிலாளர்களின் மலர் மாலைகளைக்கூட ஏற்றுக்கொள்ள மறுத்து அவர்களைத் தீண்டத் தகாதவர்கள் போல 'இன்சல்ட்' செய்த முதல் காட்சியிலேயே வராத ரோஷம் கதை முடியும்போது ஜனங்களுக்கு வருவது வேடிக்கைதான்!

சமீபத்தில் 'ஏனோ தானோ' என்று வந்து போய்க் கொண்டிருந்த ஜெய்சங்கருக்கு இதில் அந்த எஸ்டேட் முதலாளி வேடம் நிறைவைத் தருகிறது.

எஸ்டேட்டில் பொழுது போகாமல் சீட்டாடிக் கொண்டிருந்தவர்களை இவர் சாட்டையால் நையப் புடைப்பது மிகையான கற்பனை.

காதலுக்கும் வீரத்துக்கும்ஃபிஃப்டிஃபிஃப்டி ஒதுக்கியிருக்கிறார் ரஜினிகாந்த் என்றாலும் காதலை விட மோதலில்தான் மணக்கிறார்.

காதலில் வெறும் ஒட்டி உரசலும் மேட்டும் போதாது எனச் சுவையான குறும்புகளையும் சேர்த்துள்ளார் ஸ்ரீதர்.

ரோஷமான சண்டைகளில் ரஜினி 'பாயும் சிங்க'மாக மாறிச் சண்டை போட்டுள்ளார். ஷொாப்ஸ்.

ஒய். ஜி. மகேந்திரனுக்கு 'டபுள் எம்.ஏ' உத்தியோகம். மனசாட்சிக்கு விரோதமாகப் பீடிகை போட்டவாறே அனுகிச் சிரிக்க வைப்பதில் இவர் 'பாஸ்' ஆகிவிடுகிறார். ஆனால் அந்த 'சிலுக்கு பேரம்' கொஞ்சம் பச்சை.

எஸ். பி. பாலசுப்பிரமணியம் முதன் முறையாக இப்படத்திற்கு இசை அமைத்திருக்கிறார். தெலுங்குப் படங்களுக்கு இசை அமைக்கும் பாணியில் தேவையில்லாத கொக்கரிப்புக்களைக் குறைத்துக் கொண்டு தமிழ்ப் படங்களுக்கு இசை அமைக்கிறோம் என்கிற உணர்வுக்கு அவர் வரவேண்டும்.

டைரக்டர் ஸ்ரீதர் தயாரிப்பாளர்களின் வியாபாரக் கண்ணோட்டத்திற்கும் தம்மால் ஒரு படத்தை விறுவிறுப்போடு இயக்கிக் காட்ட முடியும் என நிரூபித்துள்ளார்.

-திரைஞானி

---

## குடம் நீர் நூறு ரூபாய்!

தொலைக் காட்சியில் 'நீதிக்குத் தலை வணங்கு' படம் ஒளிபரப்பப்பட்டது.

அதில் ஒரு காட்சியில் எம். ஜி. ஆர். கார் ஓட்டிக் கொண்டு வருகிறார். கார் ரேடியேட்டர் சூடாகி விடுகிறது. எதிரில் ஒருவர் குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வர, அதைப் பிடுங்கிக் காருக்கு ஊற்றி விடுகிறார் எம். ஜி. ஆர்.

தண்ணீர் கொண்டு வந்தவன், ''ஐய்யய்யோ குடிக்கிற தண்ணீரைப் பிடுங்கி காருக்கு ஊற்றி விட்டாயே'' என்று அங்கலாய்க்க பாக்கெட்டில் இருந்து நூறு ரூபாயை எடுத்து நீட்டுகிறார் எம். ஜி. ஆர்.

தண்ணீர் கிடைக்காத இக்காலத்தில் ஒரு குடம் தண்ணீரை நாட்டின் முதலமைச்சரே நூறு ரூபாய் கொடுத்து வாங்கியதைப் பார்க்கும்போது வேடிக்கையாக இருந்தது.

''ஜெயம்''

## அத்தியாயம் 11

"பாட்டுப் பாடிரு வுட்டுடுவீங்களா?'' வசந்தா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''விட்டுடுவேன்.''

''வேற ஒண்ணும் வேணுமா?''

''வேணும்.''

''இது என்ன புதுசா இருக்குதே.''

''இன்னிக்கு ஒரு நா புதுசா இரேன்.''

''நானு புதுசா இருக்கிறதா?'' வசந்தா வாய் விட்டுச் சிரித்தாள். ''கூட ரெண்டு ரூபா குடுக்கணும்.''

''எதுக்கு ரெண்டு ரூபா.''

''புதுசு மாதிரி நடிக்கிறதுக்கு.''

''இருபது ரூபா தரேன். முதல்ல பாட்டுப் பாடு. அப்புறம் புதுசு மாதிரி நடி.''

''நெசந்தானு?''

''உம்மேலே சத்தியமா.''

''வுட்டேன் சொல்லுங்க.''

''ஏன்?''

''ஆள் மேலே சத்தியம் வச்சா ஆயுசு குறையும். வுட்டேன்னு சொல்லுங்க.''

இந்த முறை விசுவநாதன் வாய் விட்டுச் சிரித்தான். நெடுங்காலம் வாழ யாருக்குத் தான் ஆசை இல்லை. உலகத்தின் சகல தொழில்களும் நல்வாழ்க்கையை, வளமையை அமைதியை எதிர்பார்த்துத்தானே. இதில் இவள் தொழில் என்ன விதிவிலக்கு?

''நீ இருபது ரூபா குடுத்தா இன்னி பாரம் ஒழிஞ்சிது. நீ இருபது ரூபான்னது மேல் துட்டுத் தானே. ட்ரைவர் பேசினது சேர்த்து இல்லியே.''

''மேல் துட்டுன்னு?''

''உனக்குப் புடிச்சு நீ தர்றது. ட்ரைவர் பேசின துட்டு தனி. அந்தத் துட்டுப் பங்கு போடப் போயிடும்.''

''அடடே. அப்போது கபூர் பேசினது இதை விடக் குறைவா? டிரைவர் எவ்ளோ சொன்னுரு?''

''உங்க ரெண்டு பேருக்கும் சேர்த்துப் பதினைஞ்சு ரூபா.''

''பதினைஞ்சா?''

''ஏன் மேல் துட்டு கிடையாதுங்கிறியா''

''நோ. நோ. நிச்சயம் தருவேன். இப்பவே தரேன். இந்தா இருபது ரூபா.'' இடப் பக்கச் சட்டைப் பையிலிருந்து இரண்டு பத்து ரூபாய்களைத் தடவித் தொலைவு வெளிச்சத்தில் அடையாளம் கண்டு அவளிடம் கொடுத்தான். வாங்கிக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள். ''நல்ல மனசு உனக்கு. இப்ப என் இடுப்புல சொருகினு எங்கியாவது வுளுந்துடும். என் துட்டா இந்த பாக்கெட்ல வக்கிறேன்.'' அவன் வலப் பக்கப் பையில் வைத்தாள். பையில் உள்ள பட்டனைப் போட்டாள். டிரைவரு உன்னே ஆபீசருன்னுரு. நீ என்னமோ சினிமாப் படம் புடிச்சே. சினிமா ஆள்தானே நீ?''

''ஆபீஸர்தான்.' ஆனு சினிமா ஆளு எல்லாம் தெரியும்.''

''எல்லாருமா?''

''ம்ம்ம்''

''கமலு தெரியுமா?''

''ம்ம்ம்.''

''ரஜனி தெரியுமா?''

''ம்ம்ம்.''

''நெசமா.''

''உம்மேல சத்தியமா. சாரி... நெசம்மா.''.

''பரவால்ல. இதுக்கு சத்தியம் வைக்கலாம். நீ பேசிக்கிறியா அவங்களாண்ட?''

''நெறைய.''

''ஐய்யோ நெசம்மாவா? எப்டி... கிட்டக்க நின்னு?''

''எப்பவாச்சும் கமல் வூட்டுக்குப் போவேன். பேசுவோம். கிட்டக் கிட்ட நின்னுதான்.''

''என்ன பேசுவ.''

''படிச்சது. எழுதினது. பார்த்தது.''

''என்ன படிச்சது பேசுவ?''

''கதைப் புஸ்தகம்.''

''அப்புறம்?''

# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

''என்று இங்கிலீஷ் படம் பார்த்தோம். எப்படி கதை. இதை இங்க எப்படிச் செய்ய லாம், எப்படி மாத்தலாம்னு பேசுவோம். எழுதிப்போம்.''

''நீ எழுதுவியா?''

''எழுதணும்னு ஆசை. முடியலே.''

''ஏன்?''

''வேலே இருக்கே... எங்க உக்காந்து எழுத?''

''வேலைய வுட்ர வேண்டியது தானே.''



''இது நல்ல வேலை வசந்தா.''

''சினிமாவ விடயா?''

விஸ்வநாதன் முகத்தைப் பொத்திக்-கொண்டான். நீண்ட பெருமூச்சு விட்டான். இந்தப் பெண்ணிடம் அதிகம் பேசுகிறேம். வேறு எவரும் கிடைக்காமல் இவளிடம் மனசை இரைக்கிறேமோ. இவள் அப்பா வித்தனத்துக்கு முன் அலட்டிக் கொள்கி றேமோ?

''ஏன் தலை குனிஞ்சிட்ட.''

''ஒண்ணுமில்ல.''

''அல்லாம் வுட்டுட்டு உனக்கு சினிமா பிடிக்கப் போணும்னு ஆசை. வூட்ல வுட மாட்டேங்கறுங்க இல்லே?''

சபாஷ்! இவளிடம் கூட சின்னதாய் கெட் டிக்காரத்தனம் மின்னுகிறதே. ''எப்படிக் கண்டு பிடிச்சே வசந்தா?''

''யார் வீட்ல சினிமா எடுக்கப் போன்னு அனுப்புவாங்க? வேணும்னுதான் சொல் வாங்க. அப்படி நீ போனு என்னையும் இட்டுக்கிறியா?''

விசுவநாதன் மெலிதாய்,சோகமாய்ச் சிரித் தான்.

''உன் நல்ல மனசுக்கு ஓகோன்னு வருவ. பாரேன்.''

விசுவநாதன் மீண்டும் சிரித்தான்.



## பத்து கோடி சிரிப்பு!

எஸ். வி. சேகருடைய நாடகப் பிரியாவின் ஆயிரமாவது நிகழ்ச்சி அண்மையில் நடந்தது. எஸ். வி. சேகரைச் சந்தித்து, கல்கி சார்பில் 'கங்கிராட்ஸ்' சொன்னபோது அவர் கூறி யது: இது ஆயிரமாவது நிகழ்ச்சி. ஒரு நாட கத்தை சராசரி 1000 பேர் பார்க்கிறார்கள். ஆக, இதுவரை என் நாடகங்களைப் பார்த்த வர்கள் பத்து லட்சம் பேர். ஒரு நாடகத்தில் சராசரியாக 100 தடவை சிரிக்கிறார்கள். ஆகமொத்தம் நாடகப் பிரியா இதுவரை 10 கோடி சிரிப்புக்களைக் கிளர்ந்தெழச் செய்திருக்கிறது.

கணக்கு சரிதானு பார்த்துக்கொள்ளுங்கள். இதுவும் எஸ். வி. சேகரின் ஜோக்காக இருந்து விடப் போகிறது!

எஸ். சந்திரமௌலி

''சிரிக்காதே. உம்மேலே சத்தியமா... வுட்டேன். வுட்டேன். எம் மேலே சத்தியமா சொல்றேன். நீ ரொம்ப நல்லா வருவ.''

விஸ்வநாதன் அவள் வலக் கையை இரண்டு கைகளாலும் மெல்லப் பற்றிக் கொண்டான். உதடு பதிய அவள் புறங்கையில் முத்த மிட்டான். வசந்தா இடக் கையால் அவன் தலையை உருட்டி விட்டாள். பிடரியை நீவி விட்டாள்.

''ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு கஸ்டம். ஒவ்வொரு விதமான வேதனை. உனக்கு உன் வேதனை. எனக்கு என் வேதனை. யாருதான் இங்க நல்லா இருக்காங்க. ஒருத்தர் கூட இல்லே.''

ஒரு லாரி வெளிச்சம் மதிலின் மேல் பளிச் சென்று விழுந்து மங்கியது.

கையில் இடையது நெளிகையில்
இடைவெளி குறைகையில்
எரியும் விளக்குச் சிரித்து
கண்கள் மூடும்.
பனி விழும் மலர் வனம் உன்
பார்வை ஒரு வரம்.

இவளுக்கும் எனக்கும் இடையே மன வெளி ரொம்பக் குறைந்து விட்டதோ.

''ஒனக்கு ரொம்பப் புடிச்சப் பாட்டா இது?''

''ம்ம்ம்.''

''எனக்கும் கூடப் புடிச்ச பாட்டுன்னு நெறைய இருக்குது. மறக்கவே மறக்காது.''

''பாடறேன்னியே.''

''ஐயோ புடிச்சிக்கினியா பேஜாருப்பா.''

''ம்ம்ம். ஜாக்கிரதை. உன் துட்டு எம் பைல இருக்குது.''

''இருக்கட்டுமே. நான் பாடாதபோனுக் கூடக் குடுத்திடுவே.''

''எப்படிச் சொல்றே?''

''உம் மூஞ்சி சொல்லுதே.''

''துட்டு இல்லப் போ.''

''வச்சிக்கயேன்.இதுவந்துதானு கோட்டை கட்டப் போறேன். எவ்வளவோ ஏதேதோ வுட்டாச்சு. இந்த இருபது ரூபாதானு.''

''உனக்கு உன் வேதனை. எனக்கு என் வேதனைன்னியே...என்ன வேதனை உனக்கு?''

''ஒண்ணு ரெண்டா...ஒவ்வொரு நாள் ஒவ்வொரு மாதிரி.''

''இன்னிக்கு என்ன வேதனை? நானு?''

''நீயா வேதனை. என் ராசா.'' வழித்து நெட்டி முறித்தாள். எவங்கிட்ட இப்டி மனசு வுட்டுப் பேசிருக்கேன். எவன் பைல என் துட்டை இப்படி தைரியமா வச்சிருக் கேன். வேறென்னு மனசைப் போட்டுக் குடையுது.''

''என்ன வசந்தா?''

''என் கூட இருக்கிற பொண்ணு. எம் மாதிரிதான். நேத்திலேர்ந்து காணம். லாரில ஏறிக்கினுப்போனு இன்னும் வரலே.''

''உறவா?''

''இல்லே. இங்கித்து ஸ்நேகம். மல்லி கான்னு கூப்பிடுவோம். எங்கப் போனுளோ தெரியலே.''

''ஓடிட்டாளா?''

''சாக்கடைக்குப் போக்கிடம் ஏது?வருவா. எம் பொட்டிலதான் அவ துட்டு, துணிமணி எல்லாம் இருக்குது. நா கிளம்பட்டுமா?''

''பாடவே யில்லேயே.''

''வுடவே மாட்டியா?''

''சரி போ. இந்தா துட்டு. இன்னொரு தடவை வந்தாப் பாட்னும்.''வலது பையின் பட்டனைப் பிரித்தான்.

''இன்னொரு தடவை வருவியா?''

''தெரியலே.''

''அப்பப் பாடிடறேன். என்ன பாடறது''

''என்ன மனசுல தோணுதோ பாடு.''

''என்னென்னவோ தோணுது. இப்படியே செத்துப் போயிடலாமான்னு தோணுது. அதைப் பாட்டாப் பாட முடியுமா?''

''ச்சு... என்ன வசந்தா.''

''ரொம்பக் கஷ்டங்க இந்தத் தொழிலு. நேத்து ஒருத்தன் செருப்பு எடுத்து அடிக்க வந்தான். எழுந்து உடுத்திக்கறதுக்குள்ள ரெண்டு அடி அடிச்சுட்டான். இன்னிக்கு நீ மரியாதையா எதுக்க உக்கார வச்சு பாட்டுப் பாடுன்னு கேக்கறீங்க. என்னால ரெண்டை யுமே தாங்க முடியலே.'' — வசந்தா அவன் தோளில் சாய்ந்து கொண்டாள். விஸ்வ நாதன் அவளை அணைத்துக் கூந்தலை வருடி னன். நெற்றியில் உதடு பதித்தான்.

இறையே, பரம்பொருளே, அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமான உருவே, இந்தப் பெண் குநந்தைக்கு நிம்மதி கொடு. இவள் யாராயினும் சரி,வளரட்டும்.வளர்ந்து உரமாகி நிற்கட்டும். உயர்வு பெறட்டும்.

''முடியலேன்னு வேணும் வசந்தா.''

வசந்தா இன்னும் முகத்தை அவன் தோளில் அழுத்திக் கொண்டாள். அவன் கழுத்து வளைவில் கன்னத்தை உருட்டிப் பறு மாதிரி பொதிந்து கொண்டாள்.

''தேவுடு சேசின பெள்ளியிது'' மெல்ல ஒரு வரி பாடி நிறுத்தினள்.''மா தேவனின் லீலையிது...''மெலிந்த குரலில் உச்ச கருதியில் அடுத்த வரி இழுத்தான். மௌனமானுள். குரலைச் சரி செய்து கொண்டாள். மறுபடி ஆரம்பித்தாள்.

தேவுடு சேசின பெள்ளியிது
மா தேவனின் லீலையிது
கலகல லாடே நவ்வுனு லோவா
கன்னீர் எந்துக்கோ.

இது கடவுள் செய்த கல்யாணம் இது அவன் லீலை. இங்கே அழுகை எதற்கு சிரி. கலகலவென்று சிரி. பாடிவிட்டு வசந்தா விசும்பினள்.

விஸ்வநாதனுக்குள் ஒரு குதிரை சோர் வோடு அலைந்தது. களைப்போடு தடுமாறியது. நீரற்ற பாலைவெளியில் வெகு நாளாய் நீர் தேடுவது போல் திரும்பித் திரும்பி வெறித் தது.

''அடியே வசந்தா எங்க இருக்கிற? வசந்தா'' யாரோ மூன்று நான்கு பேர் திபுதிபுவென்று ஓடி வந்தார்கள்.

வசந்தா திடுக்கிட்டுத் திரும்பினள்.

உயரமும் தடிமனுமாய் ஒரு பெண் ஓடி வருவது தெரிந்தது.

## சிங்கப்பூர் குடை



**அட்டையில் இருப்பவரைப் பற்றி:**

பெயர் உஷா மூர்த்தி. படிப்பது தி. நகர் சாரதா வித்யாலயாவில். ப்ளஸ் ஒன்.

**அவர் தலையில் இருக்கும் குடை பற்றி:**

உஷாவின் அப்பா அம்மா இருவரும் சிங் கப்பூர் சென்றிருந்தபோது வாங்கிக் கொண்டு வந்ததாம் இந்தக் குடை. ''இது சிங்கப்பூரில் ரொம்ப பாபுலர். குழந்தைகள், இளைஞர்கள் வயதானவர்கள் எல்லோருமே பயன் படுத்துகிறார்களாம். விலை சுமார் 50 ரூபாய். இங்கே இந்தக் குடையைத் தலையில் வைத் துக்கொண்டு வெளியில் போனுல், எல் லோரும் ரொம்ப விநோதமாய்ப் பார்க் கிறார்கள். அதனல் வெளியில் இதை வைத் துக்கொண்டு போவதில்லை'' என்கிறார்.

**உஷாவின் ஹாபி:**

ஆட்டோகிராப் சேகரிப்பது. கவிஞர் வைர முத்து, ''உங்கள் வீட்டு ரோஜாவில் முட் களும் கூடப் பூக்களாய் மலரட்டும்'' என்று கையெழுத்திட்டது மிகவும் பிடித்தது என் கிறார்.

எஸ். சந்திரமௌலி
வண்ணப்படம் : கேதார்நாத்

''அடியே மல்லிகா பூட்டாளாண்டி..''

''ஓடிப் பூட்டாளா?''

''செத்துப் பூட்டாளாண்டி. லாரி ஏறிட் சாம். பெரிய பாளையம் போலீஸ் எடுத்துக் கினு போயி மெட்ராஸ் ஆஸ்பத்திரில பாடிய சேத்துட்டாங்களாம்.''

''ஐய்யோ'' வசந்தா மீது வாய் கை வைத்துக் கூவினள். ''ஐயோ... ஐயோ...'' என்று அறைந்து கொண்டாள். தரையில் விழுந்து புரண்டாள். எழுந்து அலைந்தாள். தடுமாறினள். விஸ்வநாதன் பயத்துடன் எழுந்து நின்றான்.

''அக்கா நான் பாக்கணும்.எம்மல்லிகாவ நான் பாக்கணுமே.'' அந்தப் பெரியவளைக் கட்டிக் கொண்டு கதறினள்.

''வா...வா.... எதுனு வண்டி புட்சிப் போயிடலாம் வா.'' அந்தப் பெரியவள் அணைத்து அழைத்துப் போனுள்.

சற்றுத் தொலைவில் போனதும் விஸ்வநாதன் சிகரெட் தேடினான். சட்டைப் பையில் கை விட்டான். இருபது ரூபாய் உறுத்திற்று.

''வசந்தா வசந்தா... இருபது ரூபா'' தொடர்ந்து விரைவாய் நடந்து கூவினான். அதற்குள் பாதை இருளில் இறங்கி விட்டார்கள். கபூர் ஓடி வந்தான்.

''என்ன சார் என்ன சார் ஆச்சு?''

''என்னவோ ஆக்ஸிடெண்டாம்.''

''யாருக்கு?''

''அவங்க கூட்டத்துப் பெண்ணுக்கு.''

''எந்த இடம்?''

''புத்தூர் தாண்டி. பெரியபாளையம் பார்டர்ல சார்.'' அந்தக் கூட்டத்தோடு வந்த சின்னப் பையன் கபூருக்குப் பதில் சொன்னான். ''மூஞ்சில லாரி அடிச்சிருக்கு. அடையாளமே தெரியலே. நாலு விரலு காணம். என்ன அடிபட்டிருக்கணும். அப்ப நீ ரூபா குடு சார். வசந்தா இட்டக் குடுதுட்றேன்.''

''ச்சீ போடா'' கபூர் விரட்டினான்.

''துட்டு குடுக்கல்ல ஆன் இட்டாருவேன்.''

''அடி....'' கபூர் பட்டென்று அந்தப் பையன் தலையில் அடித்தான். ''வாங்க சார் வண்டில ஏறுங்க.''

வண்டியில் ஏறினதும் சரட்டென்று திருப்பிக் கிளப்பினான்.

''மிரண்டுட்டியா சார்'' கபூர் திரும்பாமலே கேட்டான்.

இது பயமா? ஆட்கள் கண்டு நடுக்கமா? மிரட்சி யாருக்கு வரும்? குற்றமுள்ளவனுக் குத்தானே. குதிரை மிரளுமா?

நீர் குடிக்கக் குனியும் குதிரை
நிழல் தெரியப் பின்னால் போகும்
மிரளுது மிருகம் என்பார்
சீர்குணம் அறிய மாட்டார்
வேறொன்று குடிக்கும்போது
தான் கலக்கல் கூடாதென்று
குழப்பத்தைத் தவிர்க்கும் குதிரை
மிருகத்தில் குழந்தை ஜாதி
கால் வைத்த இடங்கள் எல்லாம்
பூ முளைக்கும் இடமென்றெண்ணி
குளம்பது விளிம்பில் நிற்கும்
குதிரையா மிரளும் மிருகம்
குதிரையின் குளம்பைப் பாரும்
இடுக்கிலே ரோமம் சிரிக்கும்
இது குதிரைகள் எனக்குச் சொன்ன
வேதத்தின் ஆறும் பரடம்.

கார் ரயில் பாதையைத் தாண்டியது. ''சார் நம்ப லாரி.'' கபூர் கூவினான். சட்டென்று பிரேக் போட்டு இடப்புறம் ஒதுக்கினான். வலப்பக்க ஓரம் மலை துணி கொளுத்தின வெளிச்சத்தில் புகையினூடே காந்திலால் டிரான்ஸ்போர்ட் என்கிற பலகை பளபளத்தது. ஆக்ஸில் ஷாப்ட் கழன்று தரையைத் தேய்த்துக் கோடு போட்டிருந்தது. ப்ரேக்டௌன். விஸ்வநாதன் வசந்தாவை மறந்து போனான்.

(தொடரும்)

● 'பாடறப்போ பாஷை பாழாறது' என்று வம்புச் சண்டைக்குச் சங்கீதத்தைச் சந்திக்கு இழுக்கிற பாலகுமாரன், ''சார்ங்கமுதைத்த சரமழைபோல்'' என்றிருக்கிற அழகானதிருப் பாவை வரியை 'சாரம் உதைத்தச் சரமழை போல்' என்று ஒட்டுச் சாரங்களில் மழை உதைப்பதாகக் காட்டி, பாட்டையே பாழாக்கி விட்டாரே!
மதுரை அ. இராஜகோபாலன்

● ''கோபுரம் தாங்கும் பொம்மைகள்'' என்ற நாடகம் தாங்கள் எழுதியது போல் நல்ல நாடகமே. அதில் நாணுவாக நடித்த திரு ஆர். எஸ். ஜெயகாந்த் அவர்களைப் பற்றி ஒரு வரிகூடப் பாராட்டாமல் இருந்தது வியப்பு. சிறப்பான நடிப்பாற்றல் உள்ள நடிகர்களைத் தங்களைப் போன்ற பத்திரிகைகள் தான் உற்சாகப்படுத்தி முன்னுக்குக் கொண்டு வரவேண்டும்.
சென்னை-5 எஸ். ரகுநாதன்
வே. வெங்கடேசன்

● சிருங்கேரி ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்கள் பிரதமர் கரத்தைப் பலப்படுத்தக் கூறிய தற்குச் சமாதானம் தெரிவித்திருப்பது பொருத்தமாகத் தெரியவில்லை. ஒருமுறை தேர்ந்தெடுத்து விட்டால் அப்புறம் பிரதமர் எது செய்தாலும் ஒத்துழைப்புக் கொடுக்க வேண்டும் என்றால் எமர்ஜன்ஸியின்போதும் பிரதமருக்கு ஒத்துழைப்புக் கொடுத்திருக்க வேண்டும் என்றாகிறது அல்லவா? அமெரிக்காவில் நிக்ஸன் ஊழல் செய்தபோது பதவியை விட்டு இறக்க மக்கள் எதிர்த்தார்கள் அல்லவா? அல்லது ''நாம்தானே தேர்ந்தெடுத்தோம், ஊழல் செய்தால் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்று சும்மா இருந்தார்கள்? பத்திரிகைகளும் பிரதமருக்கு ஜால்ரா போட வேண்டியதுதானு?
சென்னை-17 சித. வைரவன்

● காந்தி திரைப்படத்தைப் பற்றி எல்லாப் பத்திரிகைகளும் எழுதி வருகையில் தாங்கள் மட்டும் வித்தியாசமாக அட்டையில் மகாத்மாவாக நடித்த 'பென்கிங்ஸ்லி'யின் டூவியத்தைப் போட்டு, இரண்டு தலைமுறைகளுக்கிடையே ஒரு பேட்டியமைத்துத் தணியாத தேசபக்தியைக் காட்டி விட்டீர்கள்.
சென்னை-5 எஸ்.வி. ராஜசேகர்

● கடைசிப் பக்கத்தில் இடம் பெற்றிருந்த 'இயற்கை வைத்தியம்' கேள்வி பதிலைப் படித்தேன். சிரித்துச் சிரித்து எனக்கு வயிற்று வலியே வந்து விட்டது. உடனே எமனேஸ்வரனிடம் சொல்லி மருந்தைஅனுப்பச்சொல்லுங்கள்!
நெய்வேலி-3 ப. உத்தண்டராமன்

● திருச்செந்தூரில் அ. இ. மு. க.வின் வெற்றி பற்றி நீர் ஒருவராவது நடுநிலைமையாக, அடக்கமாக கார்ட்டூன் போட்டிருந்தது மனத்துக்கு இதமாக இருந்தது.
அரவக்குறிச்சிப்பட்டி எம். அசோகராஜா

● ''இது ஒரு கதர்ப் படம் தமிழ் நாட்டு சில்க் ரசிகர்கள் எப்படி வரவேற்பார்களோ தெரியாது.'' சிறுக்குப் பைத்தியங்களுக்கோர் பளார்! பளார்!! பளார்!!!
கருங்கல் ஆர். ஜார்ஜ்

● பயணிகளுக்கு வசதிகளை அதிகரிக்காமல் ரயில்வே கட்டணத்தை ஏற்றிக் கொண்டே போவது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சும் கதைதான்.
சென்னை-45 கணபதி சுப்பிரமணியம்




● பாரதநாட்டின்பொருளாதாரம் போலியோக் குழந்தையாகி நடக்க முடியாமல் திண்டாடும் வக்ரங்களைத் 'தலையங்கம்' உரைகல்லில் அனைவருக்கும் புரிந்துகொள்ளும்படி நன்கு உணர்த்திவிட்டீர்.
ஸ்ரீரங்கம் ஆர். கோபால்

● ஏன் சார், உங்கள் வீட்டில் நீங்கள் படும் அவஸ்தைகளை யெல்லாம் நாசுக்காகக் கடைசிப்பக்கக் கட்டுரையாக்கி விட்டீரே! பிடியும் என் அனுதாபத்தை!
சென்னை-17 கே. சங்கர்

● தங்களது 30—1—83 கல்கி இதழ் பக்கம் எண் 62ல் நெருப்பூரில் கட்ட செய்தி என்ற தலைப்பில் எங்களது கிராமத்தைப் பற்றித் தரக் குறைவான செய்தியை வெளியிட்டிருக்கிறீர்கள். இதைக் கண்டிக்கிறோம்.
நெருப்பூர் சாரதா சண்முகானந்தம்

(கட்டுரைக்குப் பேட்டிதந்த புலவர் க.கிருட்டிணசாமி ஆராய்ச்சிகள் பல செய்து டாக்டர் பட்டம் பெற்றவர். கல்கியில் வெளியான மேற்படி செய்தி அவரது ''கொங்கு நாட்டுப்புறப் பாடல்கள் (தொகுப்பு 2)'' என்ற ஆய்வு நூலிலும் இடம் பெற்றுள்ளது. இதே செய்தியைக் குறிப்பிட்டுப் புத்தக விமர்சனமும் நாளிதழில் வந்துள்ளது. எவ்வாறுமிறும் மேற்படி செய்தி அந்த ஊரில் வசிக்கும் மக்கள் மனத்தைப் புண்படுத்துவதாகத் தெரிவதால் வருந்துகிறோம்.
ஆர்.)

# பாட்டைப் பாழாக்கி விட்டாரே!

# நீங்கள் கேட்டவை

## தராசு

## யார் வலையிலோ தள்ளப் பட்டிருக்கிறீரா?

○ கரந்தை து. சுவாமிநாதன், தஞ்சை-2

? காமம் மலிந்துள்ள இக்காலத்தில் தர்மம் மெலிந்துள்ளதே காரணம் என்ன?

! பல பெண்களை ஏமாற்றிப் பணம் பறித்ததுடன், விவாகரத்துக்கள் இன்றியே 105 மனைவிகளை அடைந்து, கின்னஸ் புக்கிலும் இடம் பெற்றுள்ள கியோவானி அண்மையில் சிறைப்பட்டு விட்டானே! தர்மத்தின் வாழ்வைச் சூது கவ்வினாலும் மீண்டும் தர்மம் வெல்லும் என்பதற்கு இதுபோல் எத்தனையோ உதாரணங்கள்.

○ உமா பாரதி, புதுச்சேரி-5

? தமிழில் கவிதைப் புத்தகங்களை அதிகமான விலைக்குப் பிரசுரிக்கிறார்களே இதை யாரும் கேட்கக் கூடாதா?

! கவிதைப் புத்தகங்கள் என்ன, வேறு எந்தப் புத்தகத்தைத்தான் வாங்கும் சக்தி நமக்கிருக்கிறது? ஆனால் இதற்காகப் புத்தகங்களைக் குறை கூறுவது முறையல்ல. இன்றைய விலைவாசி அப்படி. அண்மையில் நர்மதா வெளியீடாக (10, சோமசுந்தரம் தெரு, சென்னை-17) ''உதய காலங்கள்'' என்ற நூலைப் பார்த்தேன். பார்த்தது பார்த்தபடி இருந்தேன். அத்தனை அழகு! வெல்வெட் மேலட்டை, உயர் ரகத் தாள், இரு வர்ண அச்சு, அழகிய படங்கள், அருமையான லே-அவுட் எழுதி பிளாக் செய்த தலைப்புக்கள், இத்தனை நேர்த்தியாக அச்சான நூலுக்குப் பத்து ரூபாய் தரக் கூடாதா என்ன? ''அமுத பாரதி'' எழுதி வெளியிட்ட இந்தப் புதுக் கவிதைத் தொகுப்பில் ஒன்று:

அழகு மலரும்
ஆடும் கனியும்
இழையும் கொடியாம்
இளையவள் மேனி

எழுதேன் கவிதை
என்று கேட்டது

என்னுள்
கவிதைக்கரு உண்டாகுமுன்
இளையவள் என்னால்
கருவுண்டானாள்.

கவிதையா?
அதுதான்
பிறக்கப் போகிறதே!

○ காண்மயன், தொழுதூர்

? இப்போதெல்லாம் வாசகர்கள் வருத்தப்படும் நிலைக்கு யார் வலையிலோ தள்ளப்பட்டிருக்கிறீர்கள் என்று நினைக்காமல் இருக்க முடியவில்லையே?

! திருச்செந்தூரில் அ. தி. மு. க. வெற்றியை நான் வாழ்த்தியிருந்தால் தி. மு. க. அனுதாபிகள் இதே போன்ற கேள்வியைத்தான் எழுப்பியிருப்பார்கள். கருணாநிதி, எம். ஜி. ஆர். இருவருக்குமே நான் உற்ற நண்பனாகத்தான் என்னைக் கருதிக் கொண்டிருக்கிறேன். ஒருவரைக் குறை கூறுவதோ, அல்லது வாழ்த்துவதோ இரண்



டுமே அவர் நலனுக்காகத்தான். ஜால்ரா போடுவதல்ல நட்பின் இலக்கணம். சந்தேகமிருப்பின் வள்ளுவரைக் கேளுங்கள். ''மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டு'' நட்பு என்பார்.

○ கே. ராஜகோபாலன், மதுரை

? ஹிந்து மதத்தில் ஏகப்பட்ட முரண்பாடுகள் இருக்கின்றன என்று சொல்கிறாரே எஸ். எஸ். ஆர்? (கரைத்துக் குடித்த மாதிரி?)

! இந்தப் பிரமாத விஷயத்தைக் கூற எதையும் கரைத்துக் குடித்திருக்க வேண்டிய அவசியமில்லை. முரண்பாடுகள் என்பது வளர்ச்சியின் அடையாளம். நாகரிக முன்னேற்றத்தின் அடிப்படையில் மிகத் தொன்மையான இந்து மதம் பல மாற்றங்களை ஏற்றுக் கொண்டிருப்பதுதான் அதன் தனிச் சிறப்பு. ஆயினும் ஹிந்து மதத்தின் அடிப்படைத் தர்மங்கள் நிலையானவை. அவற்றைப் புரிந்து கொள்ள கீதையையும் உபநிஷதங்களையும் படிக்க வேண்டும்.

○ ந. க. பரமசிவம், சென்னை-7 ★

? மானங்கெட்ட ஜன்மங்கள் எப்படி இருப்பார்கள்?




! இஸ்ரேலிய அமைச்சர் ஷரான் போலவும், பிரதமர் பெகின் போலவும். மேற்கு பீருட்டில் நடந்த படுகொலைகளைப் பற்றி விசாரணை நடத்த இஸ்ரேலிய அரசு கஹான் கமிஷனை அமைத்தது. இந்தக் கமிஷன் சமர்ப்பித்த அறிக்கையில் இந்தப் படுகொலைகளைக் கிறிஸ்துவ அணியினர் நடத்திய போதிலும் அவர்களைப் பாலஸ்தீனிய அகதிகள் முகாமுக்குள் போக இஸ்ரேலிய ராணுவத் தளபதிகளும் பாதுகாப்பு அமைச்சர் ஷரானும் அனுமதித்தது பெரும் தவறு என்கிறது. அங்கு என்ன நடக்கும் என்று முன்கூட்டியே ஊகிக்க முடியவில்லை என்று ஷரான் கூறிய சமாதானத்தை ஏற்காத கமிஷன், ஷரான் ராஜினாமா செய்ய வேண்டும் என்றது. மேலும் கிறிஸ்துவ அணியினர், பாலஸ்தீனிய முகாம்களுக்குள் போக அனுமதிக்கப்பட்டது பிரதமர் பெகினுக்கு முன்கூட்டியே தெரியாது என்றாலும் தெரிய வந்த பிறகும் இரு தினங்கள் வரை அது பற்றி எந்தவிதக் கவலையோ அக்கறையோ கொள்ளாமல் இருந்திருக்கிறார் என்று பெகின் தலையிலும் ஓரளவு பொறுப்பைச் சுமத்துகிறது. பிரதமர் ராஜினாமாவை கமிஷன் கோரவில்லை. எனினும் பெகின் தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்திருக்கலாம். ஆனால் அவரும் பதவியில் நீடிக்கிறார். ஷரானும் பாதுகாப்பு அமைச்சர் என்ற முறையில் அல்லாது இலாக்கா அற்ற மந்திரியாக மந்திரி சபையில் தொடர்ந்து இருந்து வருகிறார்!

○ **கே. எஸ். கணபதி சுப்பிரமணியம், சென்னை-45**

? **மதத்தின் பெயரால் அஸ்ஸாமில் நடைபெறும் கலவரங்கள் கேடானதுதானே?**

! கலவரங்கள் கேடானதுதான். ஆனால் அவை மதத்தின் பெயரால் நடக்கவில்லை. 1979ல் அஸ்ஸாமியர் அயல் நாட்டவரை எதிர்த்துப் போராட்டம் தொடங்கினார்கள். எல்லைப்புறத்தில் உள்ள அஸ்ஸாமில் பல அயல் நாட்டவர் குடியேறுகிறார்கள். மிக அதிகமாக வருகிறவர்கள் பங்களா தேச அகதிகள். இதனால் அஸ்ஸாமில் அஸ்ஸாமியரே மொழி ரீதியிலும் கலாசார ரீதியிலும் சிறுபான்மையினராகி விடும் ஆபத்து உள்ளது. இப்படிச் சட்டத்துக்கு விரோதமாக அஸ்ஸாமில் வந்து குடியேறிய அயல்நாட்டவர் அரசியல் ஆதாயத்துக்காக 1979ல் தயாரிக்கப்பட்ட வாக்காளர் பட்டியலில் சேர்க்கப் பட்டிருக்கிறார்கள். இவர்கள் இந்தியப் பிரஜைகளே அல்ல; வாக்காளர் பட்டியலில் எப்படி இடம் பெறலாம் என்று அஸ்ஸாமியர் கேட்கின்றனர். இந்தப் பட்டியலின் அடிப்படையில் நடக்கும் எந்தத் தேர்தலும் செல்லாது என்கிறார்கள். இவ்வாறு சட்ட விரோதமாக அஸ்ஸாமில் குடியேறியுள்ள 80 லட்சம் பேர்களும் ஒன்று அவரவர் தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட வேண்டும் அல்லது இந்தியாவின் எல்லா மாநிலங்களுக்கும் பிரித்து அனுப்பிக் குடியேற்றப்பட வேண்டும் என்பது அஸ்ஸாமியர் கோரிக்கை. இதை மத்திய அரசு ஏற்காததுதான் எல்லாக் கிளர்ச்சிகளுக்கும் காரணம்.

○ **பவானி, வத்தலகுண்டு**

? **உறங்காத நினைவுகள் படத்தில் சிவகுமார் பாத்திரம் எப்படி?**

! சிவகுமார் நல்ல நடிகர் என்பதோடு மாறுபட்ட கேரக்டர்களில் ரிஸ்க் எடுத்து நடிக்க விரும்புகிறவர். கண்ணாடி அணிந்து நடிப்பதும் நடக்க முடியாத கதாநாயகனாகச் சக்கர நாற்காலியில் வருவதும் அவர் துணிவைச் சுட்டிப் புகழும் சேர்ப்பவை.

○ **ராஜாராம், மதுரை**

? **இந்திப் படங்களில் ஸ்ரீதேவி கவர்ச்சியாக நடிக்கிறாராமே?**

! சிவப்பு ரோஜாக்கள் படத்தின் போஸ்டரில் தமது நீச்சலுடைப் படத்தைப் போட்டதற்காக வருத்தப்பட்டுப் பேட்டி கொடுத்தவர் இப்போது இப்படிச் செய்கிறார் என்றால் தொழில் போட்டிதான் காரணம்!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
ந. க. பரமசிவம்,
1பீ, வேங்கடாசல முதலி தெரு,
புரசைவாக்கம்,
சென்னை-600 007



# மைத்துனியுடன் ஒரு ரகசியம்



வேதா கோபாலன்

நிதானமாய் மைத்துனியுடன் உட்கார்ந்து கொண்டு சாப்பாட்டை ரசித்துச் சாப்பிட்டார் கருணாகரன். ஹம்ஸா 'பரிந்து பரிந்து உணவு பரிமாறிக் கொண்டிருந்தாள்.

''ஏய் அனு.... நீ பார்க்கிறேன்னு அத்தானுக்கு வெட்கம் போல இருக்கு! வழக்கமாய் ஒரு வெட்டு வெட்டறவர் இன்னிக்குக் கொறிச்சுட்டு எழுந்திருக்கிறார் பாரேன்!'' கேலியாய்க் கணவனைப் பார்த்துச் சிரித்தாள் ஹம்ஸா!

நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளியவாறு எழுந்தார் கருணாகரன்.

''அய்யய்யோ... இதுக்கும் மேலே தாங்காதுப்பா.... ஏதோ அனுஷா பக்கத்துல உட்காரவே கொஞ்சமாவது நல்லாச் சாப்பிட முடிஞ்சுது...'' என்று அப்பாவி மாதிரி சொன்னார். ஹம்ஸா பளீரென்று சிரித்தாள் கணவனைப் பார்த்து.

''ஒண்ணு செய்யுங்கோ அத்தான்....! டப்பாவில் எதையாவது கொட்டினால் முதலில் முழுக்க நெறைஞ்ச மாதிரி தோணும். அப்புறம் நல்லாக் குலுக்கி விட்டுட்டா, அது முக்காலுக்குக் குறைஞ்சுடும். அது மாதிரி நீங்களும் ரெண்டு தடவை உடம்பைக் குலுக்கிக்கிட்டு ரெண்டாவது தடவை சாப்பிட உட்காருங்க.'' அனுஷா தன் பங்குக்கு ஜோக் அடித்துவிட்டு எழுந்து கையலம்பப் போனாள்.

அனுஷாவுக்கு மனசுக்குள் பகீர் பகீரென்றிருந்தது. அக்கா அத்தான் எதிரில் தன் மனத்தின் படபடப்பைக் காட்டிக் கொள்ளக் கூடாது என்ற ஒரே காரணத்துக்காக மட்டுமே கொஞ்சம் ஜாலியலாய் இருப்பது போல நடித்துக் கொண்டிருக்கிறாள். குறிப்பாக அத்தானை நிமிர்ந்து பார்க்கவே கூச்சமாக இருந்தது. சொந்தத் தங்கையுடன் பழகுகிறது போல் பழகிக் கொண்டிருக்கிறார் கருணாகரன். இனிமேலும் இது நீடிக்குமா? சந்தேகம்தான்.

''என்னடி குழாயடியிலேயே நின்னுட்டே? கையைக் கழுவறதா உத்தேசம் இல்லையா?'' என்ற ஹம்ஸா கேலியாய்க் குரல் கொடுத்த பிறகுதான் திடீரென்று உறைத்தாற் போலக் கையைக் கழுவிக் கொண்டு உள்ளே வந்தாள்.

ஹம்ஸா சாப்பிட உட்கார்ந்தாள். ''அனு

அத்தானுக்கு வெத்திலே மடிச்சுக் கொடுத்துட்டு அப்புறம் எனக்குப் பரிமாற வாடி.... இத்தனை வயசாச்சே தவிர இதுகூட இன்னும் மத்தவா செய்து கொடுக்கணும்...'' என்று பெருமையாய் அலுத்துக் கொண்டு, வேண்டியவற்றை இலையில் வைத்துக் கொண்டாள்.

''அத்தான் நாளைக்குச் சாயந்திரம்நான் கிளம்பலாம்னு இருக்கேன்....'' சட்டென்று குரலைத் தாழ்த்திக் கொண்டாள், அனுஷா. ''அத்தான்... ஒரு சின்ன ரகசியம். கண்டிப்பா அக்காவுக்குத் தெரியக் கூடாது'' என்று கிசுகிசுத்தாள்.

கருணாகரன் குழப்பத்துடன் நிமிர்ந்து பார்த்தார். ''நீதான் ரெண்டு நாளைக்கு மேல இங்கே தங்கறதில்லைன்னு கங்கணம் கட்டிக்கிட்டு வருவியே...'' என்றவர் கேள்விக் குறியாய் முகபாவத்தை வைத்துக் கொண்டார்.

வெற்றிலையில் பாக்கை வைத்து, பான் பஹார் கொஞ்சம் போட்டு இனிப்பு மசாலாவைத் தடவி முக்கோணமாய் மடித்து அத்தானின் கையில் திணித்தவள், சட்டென்று ரவிக்கைக்குள்ளிருந்து, பலமுறை மடிக்கப்பட்ட காகிதம் ஒன்றை எடுத்தாள். ''படிச்சுப் பாருங்க'' என்றவாறு அவர் கையில் கொடுக்கப் போனபோது ''நான் உள்ளே வரலாமா?'' என்ற நாகக்கான குரல் கேட்டுத் திரும்பினார் கருணாகரன். காகிதம் வழுக்கிக் கீழே விழுந்தது. அத்தானுக்கு அவன் பார்த்துப் பார்த்து ரகசியமாய் எழுதிய கடிதம்.

இதற்குள் ''யெஸ் கம் இன்'' என்று கருணாகரன் சொல்ல, மீண்டும் கடிதத்தை எடுத்து ரவிக்கைக்குள் திணித்துக் கொண்டு விட்டாள் அனுஷா.

வந்தவன் எதிர் வீட்டு ஸ்ரீதர். ''குட் மார்னிங் சார்... ஸ்பானர் இருந்தால் கொஞ்சம் கொடுங்களேன். ஸ்கூட்டர்ல சின்ன ரிப்பேர்.... டூல் பாக்ஸ்ல வச்சிருந்த ஸ்பானர் மட்டும் எங்கேயோ காணோம், பாக்கி டூல்ஸ் எல்லாம் இருக்கு'' என்றான்.

அவன் உள்ளே நுழைந்ததுமே அனுஷா அக்காவுக்குச் சாப்பாடு பரிமாற உள்ளே வந்து விட்டாள். முகம் முழுக்க ஏமாற்றம் போஸ்டராய் ஒட்டப்பட்டிருந்தது. ''சே, இந்த மனிதன் ஐந்து நிமிஷம் கழித்து வந்திருக்கக் கூடாதா? சமயத்துக்கு வந்து காரியத்தைக்கெடுத்து விட்டானே''என்று எரிச்சலாய் வந்தது. பத்து நிமிடங்கள்கூட இல்லை. ஸ்ரீதர் ''வரேன் சார்'' என்று கணீரென்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

கருணாகரனுக்கு மனத்தில் குறுகுறுவென்று ஏதுவோ உழுதது. என்ன எழுதிக் கொடுத்தாள் அனுஷா? ஏன் அது அக்காவுக்குத் தெரியக் கூடாது என்று வேறு சொன்னாள்? ஹம்ஸாவும் ஏதோ சாப்பிட்டேன் என்று பெயர் பண்ணினாளே தவிர மனமே சரியில்லை. தன் கணவனுக்கும் தங்கைக்கும் இடையே கிசுகிசு வென்று என்னவோ நடக்கிறது என்று அந்த சூட்சம புத்திக்குச் கலப

## The Young Master

படம் முழுவதும் குங்ஃபூ சண்டை. போடுபவர் 25 வயதான பொறி பறக்கும் ஜாக்கி சான்.

கதை ரொம்ப சிம்பிள்:சீனாவில் ஒரு நகரம், குங்ஃபூ பயிற்சிப் பள்ளிகளிடையே போட்டி. வழக்கமாக வெற்றி பெறுவது சிவப்புப்பள்ளி. ஆனால் இம்முறை அவர்கள் நம்பிக்கை நட்சத்திரம் செங் உடம்பு சரியில்லை என்று ஒதுங்கிவிட, அவரிடத்தில் சிங் (ஜாக்கி சான்) கோதாவில் குதிக்கிறார். நீலப் பள்ளியின் சாம்பியன் பிரமார்தமாகப் போரிடுவதுடன் சிங்கின் எல்லாத் தந்திரங்களுக்கும் பதில் நுணுக்கங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார். திகைக்கிறார் சிங். எதிராளியின் வேஷம் கலையும்போது தெரிய வருகிறது. உடம்பு சரியில்லை என்று ஒதுங்கிய செங்தான் துரோகமிழைத்து நீலப் பள்ளிக்காகப் போராடுகிறார் என்பது. காரணம் செங் சூதாட்டத்தில் ஏகமாகப் பணம் இழந்து கடன்பட்டிருப்பதுதான். தன்னை மீட்டுக் கொள்ள இப்படி பயின்ற பள்ளிக்கே துரோகம் இழைத்து விட்டார். மேலும் ஒரு சின்னக் குழப்பம்: பிறகு சுமுகமான முடிவு.

கதையைப் பற்றி யாருக்கு என்ன கவலை. இன்றைய ஆசியாவின் நெ. 1 குங்ஃபூ வீரர் ஜாக்கி சானின் சண்டைகள்லவா முக்கியம்?

-த. மூ. ரா.



பீகாரில் பராபங்கி மாவட்டத்தில் மூசௌலி என்ற கிராமத்தில் பிறந்தவர், பீகாரின் முன்னாள் மந்திரி ரஃபி அகமது கித்வாய். அவர் நினைவு நாளில் அஞ்சலி செலுத்த கோபால்ராம்தாஸ் என்ற மந்திரியை அழைத்திருந்தார்கள்.

மந்திரி, ''நாம் எல்லோரும் அவருக்கு மட்டுமல்லாது அவருடைய பாடல்களுக்கும் மரியாதை செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். அவர் தம் பாட்டால் நாட்டின் ஒவ்வொரு மூலையிலும் ஒரு புயலைக் கிளப்பினார் என்றே சொல்லலாம்'' என்று பேசிக் கொண்டு போனார்.

பேசி முடித்த பின்னர்தான் அவருக்குத் தெரிய வந்தது அக்கூட்டம் முகம்மது ரஃபியைக் கொண்டாடக் கூட்டப்படவில்லை. ரஃபி அகமது கித்வாயின் நினைவு நாளைக் கொண்டாடக் கூட்டப்பட்டது என்று.




இருவரும் வேறுவேறு ஆசாமிகள் என்று ஒரு வழியாகப் புரிந்து கொண்டுவிட்டார் அமைச்சர்!

—ஜெ. சரவணன்

---

மாய்ப் புரிந்து விட்டது. தங்கையின் முகத்தில் கலர் கலராய் ஓடிய முகபாவத்தில் அது உறுதிப்பட்டது. அன்றைக்குச் சாயந்திரமே மொட்டை மாடியில் இருந்த குரோட்டன்ஸ் செடித் தொட்டிகளுக்குத் தண்ணீர் ஊற்றும் போது தோட்டத்தில் அவசரமாய்த் தன் தங்கை – தன் கணவனிடம் ஏதோ ஒரு கடிதத்தைக் கொடுப்பதைக் கவனித்து விட்டாள்.

இத்தனை வருட தாம்பத்தியத்திற்குப் பிறகு இப்படி ஒரு திருப்பத்தை அவள் கனவிலும் எதிர்பார்த்திருக்கவில்லை. இருந்தாலும் யாரிடமும் எதுவும் கண்டு கொள்ளாமல் இருந்து விட்டாள் – அடுத்த ஒரு வருடம் வரையில்!

ஒரே ஒரு வருடத்தில் ஹம்ஸாவுக்கு இவ்வளவு கொடுமையான வியாதி வரும் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. புற்று நோயால் அவதிப்பட்டுப் படுக்கையில் துள்ளிக் கொண்டிருந்தாள். யாருக்குமே எந்தத் தீங்கும் நினைக்காதவருக்குத்தான் வியாதியும் பிரச்னைகளும் வரும் போலும்! கர்ப்பப் பையில் புற்று நோய்! எவ்வளவு பரிதாபம்!

எல்லாரும் பட்ட கவலையை ஹம்ஸா படவில்லை. ஒரு வகையில் அவளுக்கு மகிழ்ச்சி.

நிறைய உறவுக்காரர்களைத் தவிர, படுக்கைக்கு அருகில் அனுஷாவும் கருணாகரனும் கண்ணீருடன் உட்கார்ந்திருந்தார்கள்.

''அனும்மா... கிட்டே வாயேன்... எனக்குப் பிறந்தகத்து மனுஷான்னு யாருமே கிடையாதுன்னு குறையே இல்லை! அந்த அளவுக்கு நீ ஒட்டுதலாய் இருந்தே. திருச்சில ஹாஸ்டலில் தங்கி வேலைக்குப் போயிக் கிட்டிருந்தியேன்னுதான் கஷ்டமாய் இருந்தது. இனிமேல் அதுவும் இருக்காது. நான் என் நிமிஷங்களை எண்ணிக் கிட்டு இருக்கேன். என் புருஷனை நீ கல்யாணம் பண்ணிக்கோடி... உன்னுலாவது சந்ததி வளரட்டும். எனக்குத்தான் அந்த பாக்கியம் இல்லேன்னு டாக்டர் சொல்லிட்டார்...'' என்றவள், கணவன் பக்கம் திரும்பி ''என்னங்க... நீங்க நம்ப அனுஷாவைத்தான் கல்யாணம் பண்ணிக்கணும். என்மேல் ஆணை'' என்று சொல்லியவள் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கண்களை மூடிவிட்டாள். கொஞ்ச நேரத்துக்கு முன்பு ஜீவனுள்ள அவள் கண்களிலிருந்து வெளிப்பட்ட கண்ணீர் இப்போது ஜீவனற்ற கன்னங்களில் வழிந்தோடியது.

அனுஷாவுக்குக் கிட்டத்தட்ட மயக்கமே வருவது போல ஆகி விட்டது! ஹம்ஸா இறந்த அதிர்ச்சியை விட அவள் கடைசியில் சொல்லிவிட்டுப் போன வார்த்தைகள்தான் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. தாங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொள்வதா! எவ்வளவு கொடூரமான ஐடியா!

ஒருவேளை, எதிர்வீட்டு ஸ்ரீதரின் மேல் தனக்கு ஏற்பட்டிருக்கும் காதலை விளக்கி எழுதி அத்தானிடம் கொடுத்த கடிதத்தை அக்கா ஜாடை மாடையாகக் கவனித்துவிட்டு இப்படி ஒரு விபரீதக் கற்பனையைச் செய்து கொண்டிருப்பாளோ? பழங்கால ரசனையில் ஊறிய அக்கா இதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பாளோ என்று பயந்து அவளிடம் விஷயத்தை மறைத்தது எத்தனை பெரிய முட்டாள்தனம். சே! தலையிலடித்துக்கொண்டு அக்காவின் உயிரற்ற உடலின் மேல் விழுந்து அழுதாள் அனுஷா. அதைக் கூடச் செய்ய முடியாதவராய்த் திகைத்து நின்றிருந்தார் கருணாகரன்.

சென்னை மாநகராட்சியின் கொசு ஒழிப்புப் படையைவிடக் கொசுப் படை ரொம்பப் பெரிசு. பலன் அப்பாவி சென்னை வாசிக்கு அன்றாடம் கொசுக்கடி, கட்டாய ரத்த தானம்.

சென்னை நகரின் கொசுப் பிரச்சினை குறித்து சென்னை மாநகராட்சியின் கூடுதல் சுகாதார அதிகாரி டாக்டர் நாராயணன் பதிலளிக்கிறார்:

நிருபர்: சென்னையில் என்னென்ன வகை கொசுக்கள் இருக்கின்றன?

டாக்டர் நாராயணன்: அனோபிலிஸ், கியூலெக்ஸ் இவை தவிர, ஈடிஸ் என்ற வகை கொசுவும் காணப்படுகிறது.

நாராயணன்: அந்த விதத்தில் சென்னைவாசிகளை ஓரளவு அதிருஷ்டசாலிகள் என்றே சொல்லலாம். யானைக்கால், மலேரியா பற்றி யெல்லாம் புகார்கள் வருவதே இல்லை என்று சொல்லி விடலாம்.

நிருபர்: அப்படியெனில் கொசுக்களால் பிரச்சினையே இல்லை என்று சொல்கிறீர்களா?

நாராயணன்: 'கொசுக்கடி' இதுதான் இன்றைய தலையாய பிரச்சினை. தினமும் கொசுக்கள் பெருகிக் கொண்டே வருகின்றன. மனிதனைக் கடிக்கின்றன. ரத்தத்தை உறிஞ்சுகின்றன. ஒவ்வொரு நாளும் கொசுக்களுக்கு எவ்வளவு ரத்த தானம் செய்கிறோம் தெரியுமா?

நிருபர்: கொசுக்கடியில் ஆண் கொசு,

# கொசு ஒழிப்புக்குச் சில கோடிகள்!





✖ பக்கிங்ஹாம் கால்வாயில் செழித்த நீர்த் தாவரங்களை வேரோடு பிடுங்கி எறியவும் கரையில் மலையாகக் குவிகின்றன.

நிருபர்: இவற்றால் என்னென்ன வகை நோய்கள் பரவுகின்றன?

நாராயணன்: அனோபிலிஸ் வகைகள் மலேரியாவுக்குக் காரணமாகின்றன. கியூலெக்ஸ் யானைக்கால் நோய்க்குக் காரணம். ஈடிஸ், டிங்கு காய்ச்சலைப் பரப்பும்.

நிருபர்: குறிப்பாக சென்னையில் எந்தெந்தப் பகுதிகளில் கொசுப் பிரச்னை அதிகம் இருக்கிறது?

நாராயணன்: கூவம் நதி பாயும் பகுதி, ஓட்டேரிப் பகுதி, அடையாறு ஓடும் பகுதி, மற்றும் பக்கிங்ஹாம் கால்வாய்ப் பகுதி இவையெல்லாம் கொசு உற்பத்தியாகும் இடங்கள்.

நிருபர்: அப்படிப் பார்த்தால் மேற்கு மாம்பலம் கொசு பிரசித்தி பெற்றதாயிற்றே! அங்கே நீங்கள் சொன்ன ஆறு பாயும் பகுதி இல்லையே?

நாராயணன்: மே. மாம்பலம் ஜனநெருக்கம் அதிகமான பகுதி. கழிவு நீர் வெளியேறப் போதிய வசதி கிடையாது. அது போதுமே அபரிமிதமான கொசு உற்பத்திக்கு!

நிருபர்: கொசுக்களால் பரவும் வியாதிகள் பற்றி புகார் அதிக அளவில் வருகிறதா?

பெண் கொசு என்று ஏதாவது வேறுபாடு உண்டா?

நாராயணன்: இல்லாமலா? ஆண் கொசு கடிக்கவே கடிக்காது. ரொம்ப சாது. பிரச்சினையே பெண் கொசுக்களால்தான்! பெண் கொசுவுடன் உறவு முடிந்த கொஞ்ச நேரத்தில் ஆண் கொசு இறந்துவிடும். பெண் கொசுவுக்கு உடனே ரத்தப் பசி எடுக்கும். ரத்தத்துக்கு அலையும். அவதிடம் நாம் மாட்டிக் கொள்கிறோம். கட்டாய ரத்த தானம் செய்கிறோம்.

நிருபர்: நீங்கள் கொசுக்களை ஒழிக்க என்னென்ன நடவடிக்கைகளைக் கையாளுகிறீர்கள்?

நாராயணன்: பைரித்ரோமெக்ஸ், பேகான் போன்ற ரசாயனமருந்துகளைக் கொசுக்கள் இருக்கும் இடங்களில் தெளிக்கிறோம். சென்னை நகர் முழுவதையும் பல பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு துணை சுகாதார அதிகாரி நியமிக்கப்பட்டுள்ளார். அவர் கீழே பணியாளர்கள் வேலை செய்கிறார்கள். ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு பகுதி என்று வைத்துக்கொண்டு, எல்லாப் பகுதியிலும் மருந்து

தெளிக்கிறார்கள். முன்கூறிய மருந்துகள் தவிர, மாலதியான் மருந்தும் தெளிக்கிறோம்.

நிருபர்: கொசு மருந்தடிக்க ஒரு மிஷின் கூட வைத்திருக்கிறீர்கள் அல்லவா?

நாராயணன்: அந்த மெஷினின் பெயர் டிஃபா மெஷின். தெர்மோஃபாக் மெஷின் என்பதன் சுருக்கம். இந்த மெஷினை ஜீப்பில் இணைத்து இரவு நேரங்களில் ஒவ்வொரு பகுதியாகக் கொண்டு செல்கிறோம். இந்த மிஷின் தமிழ் நாடு அரசுக்குச் சொந்தமானது. இதில் கொசு ஒழிப்பு மருந்துடன் டீசலைக் கலந்து உபயோகிக்கிறோம். அது புகையாகிச் சுற்றிலும் பரவுகிறது. கொசுக்களை அகற்றுகிறது. இந்த மெஷின் பதினைந்து நிமிடங்கள் வேலை செய்தால் பதினைந்து நிமிடம் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளும். ஒரு நாளைக்கு சுமார் இரண்டு மணி நேரம் இதை உபயோகிக்கலாம். இதற்கு சுமார் ஆயிரம் ரூபாய் செலவாகும். யானையைக் கட்டித் தீனி போடுகிற கதைதான்.

நிருபர்: சமீபத்தில் பக்கிங்ஹாம் கால்வாயில் முளைத்துள்ள நீர்க்குவளைச் செடிகளை அகற்றும் முயற்சியில் மாநகராட்சி ஈடுபட்டதே? இதற்கும் கொசு ஒழிப்புக்கும் தொடர்பிருப்பதாகக் கூறுகிறார்களே எப்படி?

நாராயணன்: கொசு ஒழிப்பில் இரண்டு வகை. ஒன்று வளர்ந்த கொசுவை அழிப்பது. இது முழுப் பயன் தரத் தக்கது அன்று. வளர்ந்த கொசுக்கள் இயற்கையிலேயே மருந்துக் கொல்லிகளுக்குத்-தடைச் சக்தியைப் பெற்று விடுகின்றன. மேலும் இவை மருந்தின் நெடி அறிந்து தப்பிப் பறந்து சென்று விடுகின்றன.

இரண்டாவது வகை, கொசு முழு வளர்ச்சி யடையாமல் புழுப் பருவத்தில் இருக்கும்போதே அதை அழித்து விடுதல். இதில் ஏறத் தாழ முழுப் பயன் கிட்டும்.

சென்னை நகரில் ஓடும் பக்கிங்ஹாம் கால்வாய், ஓட்டேரி நல்லா, கூவம் ஆறு, அடையாறு முதலியவற்றில் நீரோட்டம் இல்லை. தண்ணீர் தங்கியுள்ளது. இதனால் கொசுப் பெருக்கம் அதிகமாக இருக்கிறது. கொசுப் புழுக் கொல்லி மருந்திட்டவுடன் புழுக்கள் இந்நீர் வழிகளில் முளைத்துள்ள நீர்த் தாவரங்களான நீர்க்குவளை, ஆகாயத் தாமரை போன்றவற்றின் வேர்ப் பகுதியில் சென்று பதுங்கிக் கொள்கின்றன. எனவே லார்விஸைட் எனப்படும் கொசுப் புழுக் கொல்லி மருந்து இவற்றைத் தீண்டாமல் பயனற்றுப் போகின்றன. ஆகையால் அத் தாவரங்களைக் களையும் பணியில் ஈடுபட்டுள்ளது மாகராட்சி. இவை களையப் பட்டவுடன் பதுங்குவதற்கு இடம் இல்லாமல் கொசுப் புழுக்கள் பெரும்பாலும் இறந்து விடும்.

நிருபர்: ஓராண்டில் சென்னை மாநகராட்சி எவ்வளவு ரூபாய் கொசு ஒழிப்புக்கு என்று ஒதுக்குகிறது?



⌘ தெரு ஓரங்களில் இப்படி நீர் தேங்கி நிற்பதால் தான் கொசுக்கள் உற்பத்தியாகின்றன.

நாராயணன்: சென்ற வருடம் பட்ஜெட் சுமார் 96 லட்சம் ரூபாய். இந்த வருடம் சுமார் ஒரு கோடியே இருபது லட்சம் ரூபாய்.

நிருபர்: இவ்வளவு லட்சங்களைச் செலவழித்தும் கொசுப் பிரச்னைக்கு உங்களால் முற்றுப்புள்ளி வைக்க முடியவில்லையே?

நாராயணன்: கொசு உற்பத்தி ஒவ்வொரு நாளும் அதிகரித்துக்கொண்டேபோகிறது. அந்த வேகத்துக்கு ஈடு கொடுத்துச் சமாளிக்கிற சக்தி சென்னை மாநகராட்சிக்கு இல்லை. பண வசதியும், பணியாளர் பலமும் போதாது. இது தவிர, இந்தப் பிரச்னைக்கு ஹெல்த் டிபார்ட்மெண்ட்டை மட்டும்குறை சொல்வது தவறு. பொதுப் பணித் துறைக்கும் இதில் முக்கிய பங்கு உண்டு. சென்னை நகர் முழுமைக்கும் நல்ல கழிவு நீர்ப் பாதை அமைப்பு கிடையாது. இருக்கிற கழிவுநீர் குழாய்களில் கழிவு நீர் வெளியேற திட்டமிட்ட முறை இல்லை. இதனால் கழிவு நீர் தேங்குகிறது. கொசு உற்பத்தி ஆகிறது. இது தவிர பொது மக்கள் வீட்டைச் சுற்றிக் கழிவு நீர் தேங்க விடுவதும் ஒரு காரணம்.

பேட்டி: எஸ். சந்திரமௌலி

புகைப்படம்: சென்னை மாநகராட்சி; ஏ. கபாலி

⌘ பக்கிங்ஹாம் கால்வாயில் அழுக்கு நீர் தேங்கிய பகுதி கொசுக்களுக்கு சுகவாசஸ்தலம்



# குப்பையிலிருந்து கலை

● சாதாரணமாக நம் வீடுகளில் தேவையற்ற பொருள்களைக் குப்பை என்று வெளியே போட்டுவிடுகிறோம். ஆனால் அவைகளையே மூலப் பொருள்களாகக் கொண்டு பலவகை பொம்மைகளைச் செய்துவிடுகிறார் கே. வெங்குசாமி. சென்னை ராயப்பேட்டை இந்தியன் பாங்க் வங்கிக் கிளையின் ரிகன்ஸிலியேஷன் பிரிவில் அதிகாரியாக இருக்கும் ஐம்பது வயதுக்காரர் இவர். இளமைத் தோற்றத்தையும், கறுகறுப்பையும் கொண்ட இவரைச் சந்தித்தபோது:

''நான் சிறு பையனாக இருந்தபோது, எனக்குச் சும்மாவே இருக்கப் பிடிக்காது. ஏதாவது புதுமையாகச் செய்ய வேண்டும் என்ற ஆசை உண்டு. நண்பன் ஒருவனுக்குப் பொங்கல் வாழ்த்து வாங்க வீட்டில் காசு கேட்டபோது அப்பா கொடுக்க மறுத்துவிட்டார். அவரைப் பொருத்தமட்டில் அது வீண் செலவு. அந்த ஏமாற்றம் என்னையே வாழ்த்து அட்டை தயாரிக்க வைத்தது. தொடர்ந்து பொங்கல், தீபாவளி, கிறிஸ்துமஸ் போன்ற பண்டிகைகளுக்கு நானே வாழ்த்து அட்டை தயாரித்தேன். உபயோகமற்ற செருப்பின் பின் பகுதியில் பண்டிகைக்கு ஏற்றவாறு சித்திரம் செதுக்கி, ரப்பர் ஸ்டாம்ப் மாதிரி பயன்படுத்துவேன். அதைக் கொண்டு வாழ்த்து அட்டை தயாரிப்பேன்.

''உமியை மையமாக வைத்து அசோகா மரங்கள், புல்வெளி முதலியன செய்தேன். பிளாஸ்டிக் ஒயரில் ஊசி இலை மரம், மற்றும் பார்வைக்கு அழகாக மரங்களைத் தயாரித்தேன்.

''ஒவ்வொரு வருஷமும் எங்கள் வீட்டுக்குக் கொலு பொம்மைகள் இப்படித்தான் அமைய வேண்டும் என்று முன்பே தீர்மானித்துப் பொம்மைகள் செய்வேன். ''தர்மாகோலிலிருந்து மூன்று அடிக்குப் பெரிய மலை செய்தேன். உள்ளே ஒரு ''தர்மாகோல்'' முருகன். பார்க்க வருபவர்கள் கன்னத்தில் போட்டுக் கொள்ளும்போது மனசு சந்தோஷத்தால் துள்ளும்.

''தூக்கம் சரியாக இல்லாததால் டாக்டரைப் பார்க்க வீட்டில் எல்லோரும் என்னை அனுப்பினார்கள். டாக்டர் இந்தப் பொம்மைகளைப் பற்றிய நினைப்பை விட்டுவிட வேண்டும் என்றார். நானா விடுவேன், விட்டது டாக்டரைத்தான்!

''சென்னையில் உள்ள பல பள்ளிகளுக்கு எனது கொலுவைப் பார்க்க அழைப்பு அனுப்பினேன். பள்ளி ஆசிரியர்கள் பாராட்டி ஊக்கப்படுத்தினார்கள். பார்க்க வரும் வேறு சிலர் ''என்ன பெரிதாகச் செய்துவிட்டார், வெறும் குப்பைதானே'' என்றுசொல்வதைச் சில சமயம்கேட்க நேரும்போது மனத்துக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது.''

சந்திப்பு: ''சிக்கி''

○ வெங்குசாமி



○ வெங்குசாமி தயாரித்த பொம்மைக் கொலு



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...



செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**



